## காந்தியடிகளின் பொன்மொழிகள்

- அகிம்சையிலும் சத்தியத்திலும் தோல்வி என்பதே கிடையாது.
- அடக்கமற்ற மனிதன் வெளியிடும் பொய் வதந்திகளால் அவன் தனக்கு மட்டுமன்று, தன் சமுதாயத்துக்கே பெருங் கேட்டினை விளைவிக்கிறான்.
- கடவுள் உண்மைப் பக்தன் ஒருவனுடைய ஒவ்வொரு சிறு காரியத்திலும் புகுந்து காட்சி தருவான்.
- உரிமைகளையே வற்புறுத்திக்கொண்டிராமல், ஒவ்வொருவரும் தன் கடமையைச் செய்தால், உடனடியாக மனித வர்க்கத்தில் முறைப்படியான வாழ்க்கை ஏற்பட்டுவிடும்.
- எல்லாம் தலைவிதி என்ற சித்தாந்தத்திற்கும் எல்லைகள் உள்ளன. எல்லா வழிகளும் தீர்ந்த பிறகுதான், விதியிடம் நம் காரியங்களை விடுகிறோம்.

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 62 | டிசம்பர்—1982 | இதழ் 12

பொருளடக்கம்



சிவபெருமானும் மகாவிஷ்ணுவும் இணைந்த சங்கரநாராயணனின் திருவுருவம் இந்த இதழின் முகப்பை அலங்கரிக்கிறது.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.

—திருமூலர்

| தொகுதி 62 | துந்துபி ஸூ மார்கழி மீ | இதழ் 12 |
|---|---|---|





भवानी भवानी भवानी त्रिवारम् उदारं मुदा सर्वदा ये भजन्ति ।
न शोको न मोहो न पापं न भीतिः कदाचित् कथञ्चित् कुतश्चित् जनानाम् ॥

பவானீ பவானீ பவானீ த்ரிவாரம்
உதாரம் முதா ஸர்வதா யே பஜந்தி ।
ந சோகோ ந மோஹோ ந பாபம் ந பீதி:
கதாசித் கதஞ்சித் குதச்சித் ஜநாநாம் ॥

—பவானீ புஜங்கம்

*பவானி பவானி பவானி என்று தேவியை மும்முறை உச்சரித்துச் சரண மடைபவர் ஒருபொழுதும் எந்த விதத்திலும் எதிலிருந்தும் துன்பப்படமாட்டார்கள், மயங்கமாட்டார்கள், பாவத்திற்கு ஆளாகமாட்டார்கள், அஞ்சமாட்டார்கள்.*

மதியால் வித் தகனாகி
மனதால் உத் தமனாகிப்
பதிவாகிச் சிவஞான
பரயோகத் தருள்வாயே
நிதியே நித் தியமேயென்
நினைவே நற் பொருளாயோய்
கதியே சொற் பரவேளே
கருவூரில் பெருமாளே.

—திருப்புகழ்

# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

வெள்ளி, செப்டம்பர் 26, 1884

இன்று ஸ்ரீராமகிருஷ்ணர் கல்கத்தாவிற்கு வந்திருந்தார். இன்று துர்க்கா பூஜை என்ற பெருவிழாவின் முதல் நாளாகிய சப்தமி தினமாகும். கல்கத்தாவில் இருந்த ஒவ்வொரு ஹிந்துவின் வீட்டிலும் இன்று தேவியின் சப்தமி பூஜை நடைபெற இருக்கிறது. ஆதர் என்ற பக்தரின் வீட்டிலுள்ள தேவியின் திருவுருவச் சிலையை ஸ்ரீராமகிருஷ்ணர் தரிசிக்க விரும்பினர். அத்துடன் நல்லவரும் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவருமான சிவநாதரையும் சந்திக்க அவர் விரும்பினர்.

பகலில் ஏறக்குறைய உச்சி வேளை. இரண்டு மணிநேரமாக, ம— கையில் ஒரு குடையைப் பிடித்துக்கொண்டு பிரம்ம சமாஜக் கோயிலின் முன்பு உள்ள நடைபாதையில் மேலும் கீழுமாக நடந்துகொண்டிருந்தார். ஒரு மணி கழிந்தது. இரண்டு மணியும் ஆயிற்று. குருதேவர் இன்னும் வந்து சேரவில்லை. இடையிடையே ம— டாக்டர் மஹால் நபீசரின் ஆஸ்பத்திரியின் படிகளில் தரையில் அமர்ந்தார்; அங்கு அமர்ந்தபடியே அவர், ஆலயத்திற்குள் துர்க்கா பூஜையை மகிழ்ச்சியுடன் கொண்டாடிக்கொண்டிருந்த சிறுவர்களும் வயது முதிர்ந்தவர்களுமாகிய எல்லோரையும் கவனித்துக் கொண்டிருந்தார்.

மணி மூன்று ஆயிற்று. சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் ஏறி வந்த வண்டி வந்து சேர்ந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் வண்டியிலிருந்து கீழிறங்கியதும், அவர் கைகூப்பிக்கொண்டே பிரம்ம சமாஜத்தாரது கோவிலை வணங்கினர். ஹாஸ்ராவும் இன்னும் சில பக்தர்களும் அவருடன் வந்திருந்தனர்.

ம—, ஸ்ரீராமகிருஷ்ணரின் முன்னிலையில் வீழ்ந்து வணங்கி, அவரது திருவடிகளைத் தொட்டார். தாம் சிவநாதருடைய வீட்டுக்குச் சென்று கொண்டிருப்பதாக, குருதேவர் ம—விடம் தெரிவித்தார். ஸ்ரீகுருதேவர் வந்திருப்பதைக் கேள்வியுற்றதும் சில நிமிஷங்களுள் ஆலயத்தினுள்ளிருந்த பிரம்ம சமாஜத்து அங்கத்தினர் பலர் வெளியே வந்து அவரைச் சிவநாதரது வீட்டிற்கு அழைத்துச் சென்றனர். ஆனால் சிவநாதர் அப்போது வீட்டில் இல்லை.

சிறிது நேரத்திற்குப் பிறகு விஜய கோஸ்வாமி, மஹால் நவிஷ் முதலிய பிரம்மோ தலைவர்கள் பலர் அங்கு வந்து குருதேவரை வணங்கினர். அவர்கள் குருதேவரை வரவேற்று, பிரம்ம சமாஜத்துக் கோயிலுக்குள் அவரை அழைத்துச் சென்றனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் சந்தோஷமான நிலையில் இருந்தார். அவரது முகத்தில் புன்சிரிப்புத் தவழ்ந்துகொண்டிருந்தது. பீடத்துக்குச் சற்றுக் கீழே, சங்கீர்த்தனம் நடைபெற்ற இடத்தில் குருதேவர் அமர்ந்து கொள்வதற்கு ஓர் ஆசனம் ஏற்பாடு செய்து தரப்பட்டது. அந்த ஆசனத்தில் குருதேவரைப் பிரம்ம சமாஜ அங்கத்தினர்கள் அமரச் செய்தனர். அங்கே விஜயரும் ஏனைய பிரம்ம சமாஜத்து அன்பர்களும் குருதேவரின் எதிரில் உட்கார்ந்திருந்தனர்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (புன்சிரிப்புடன் விஜயரைப் பார்த்து): பிற மதங்களைச் சேர்ந்தவர்களுக்கு இந்த ஆலயத்தின் உள்ளே வர அனுமதி இல்லை என்று நீங்கள் ஓர் அறிவிப்புப் பலகையில் எழுதித் தொங்கவிட்டிருப்பதாக நான் கேள்விப்பட்டேன். நரேந்திரனும் என்னிடம், ''நீங்கள் தயவுசெய்து பிரம்ம சமாஜத்திற்குப் போகக்கூடாது. அதற்குப் பதிலாகச்

சிவநாதரது வீட்டிற்குச் செல்லுங்கள்'' என்று கூறினன்.

ஆனல் நாம் எல்லோரும் ஒரே கடவுளிடமே பிரார்த்தனை செய்கிறோம் என்று நான் சொல்கிறேன். கடவுளை வழிபடும் விஷயத்தில் பொருமையும் வெறுப்பு மனப்பான்மையும் இருக்க வேண்டாம். சிலர் கடவுளுக்கு உருவம் உண்டு (ஸாகாரம்) என்கிருர்கள். வேறு சிலர் கடவுள் அருவமானவர் (நிராகாரம்) என்கிருர்கள். உருவத்தில் நம்பிக்கை உடையவர்கள் உருவமுள்ள கடவுளைத் தியானம் செய்யட்டும் என்றும், அருவத்தில் நம்பிக்கை உடையவர்கள் அருவக் கடவுளைத் தியானிக்கட்டும் என்றும் நான் சொல்கிறேன். நான் சொல்வதன் கருத்து யாதெனில், தன் கொள்கை ஒன்று மட்டுமே சரியானது என்ற பிடிவாதமும் குறுகிய மனப்பான்மையும் நல்லதல்ல.

என் மதம் மட்டுமே உண்மையானது என்றும், மற்ற மதங்கள் பொய்யானவை என்றும் பாவிப்பது நல்லதன்று. 'என் மதம் சரியானது. ஆனல் மற்ற மதங்கள் சரியோ தப்போ, மெய்யோ பொய்யோ, அதைப்பற்றி எனக்குத் தெரியாது' என்று நினைப்பது சரியான மனநிலை ஆகும். நான் இவ்வாறு சொல்வதற்குக் காரணம் இது: ஒருவன் கடவுளது தரிசனம் பெற்ருலன்றி, கடவுளின் உண்மையான இயல்பை அறிய முடியாது.

கபீர்தாஸ் பின்வருமாறு சொல்வது வழக்கம்: ''உருவத்தோடு கூடிய கடவுள் (ஸாகாரப் பிரம்மம்) எனது தாய். அருவக் கடவுள் (நிராகாரப் பிரம்மம்) என் தந்தை. எதை இகழ்வது? எதைப் புகழ்வது? தராசின் இரண்டு தட்டுகளும் சம எடையாகவே இருக்கின்றன.''

ஹிந்துக்கள், இஸ்லாமியர், கிறிஸ்தவர், சாக்தர், சைவர், வைஷ்ணவர், பண்டைக் காலத்தில் வாழ்ந்த ரிஷிகள் கூட்டத்தைச் சேர்ந்த பிரம்மஞானிகள், இந்தக் காலத்தில் வாழும் பிரம்ம சமாஜத்து ஞானிகளாகிய நீங்கள் ஆகிய எல்லோருமே ஒரே லட்சியத்தைத்தான் நாடுகிறீர்கள். ஒரு தாய் தன் குழந்தைகளின் ஜீரணசக்திக்கு ஏற்ப உணவு வகைகளைச் சமைக்கிருள். அவளுக்கு ஐந்து குழந்தைகள் இருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். வீட்டில் மீன் வாங்கியிருந்தால் அவள் தன் ஐந்து குழந்தைகளுக்கும் ஒரே மாதிரியான மீன் குழம்பே வைத்துக் கொடுப்பதில்லை. அந்த அந்தக் குழந்தையின் சுவைக்கும் ஜீரணசக்திக்கும் ஏற்ப அவள் மீனைப் பல விதங்களில் சமைக்கிருள். சிலருக்கு மீனை வேக வைத்துக் கொடுக்கிருள். மற்றும் சிலருக்கு வறுத்துக் கொடுக்கிருள். ஆயினும் தன் குழந்தைகள் அனைவரிடமும் அவளுக்குச் சரிசமமான அன்பு இருக்கிறது.

என் மனநிலை எத்தகையது என்பது உங்களுக்குத் தெரியுமா? நான் மீனை எல்லா விதங்களிலும் சமைத்துச் சாப்பிட விரும்புகிறேன். ஒரு பெண்ணின் இயல்பைப் படைத்தவனுக நான் இருக்கிறேன். (எல்லோரும் சிரித்தனர்.) வறுத்த மீன், மஞ்சளிட்டுப் பொரித்த மீன், மீன் பச்சடி, மீன் குழம்பு ஆகிய எல்லாவற்றையுமே நான் விரும்புகிறேன். மேலும் தலை மீன், காலியா, புலவு போன்ற மீன் சமையல் வகைகளும் எனக்குப் பிடிக்கும். (அனைவரும் சிரித்தனர்.)

உண்மை எது என்பது உங்களுக்குத் தெரியுமா? ஆன்மிக வாழ்க்கையில் ஈடுபாடு கொண்ட பலவிதமான மனப்பான்மை கொண்டவர்களுக்கும், பலவிதமான காலங்களுக்கும் தேசங்களுக்கும் ஏற்ற வகையில் பகவான் பல வித மதங்களை ஏற்படுத்தியுள்ளார். எல்லா மதச் சித்தாந்தங்களுமே கடவுளை அடைவதற்கு உரிய பாதைகளே ஆகும். ஆனல் ஒரு பாதையே எந்த விதத்திலும் அடைய வேண்டிய இல்ட்சியமாகிய கடவுள் ஆகிவிடாது. இந்தப் பாதைகளில் ஏதேனும் ஒன்றை மனம் முழுவதும் நிறைந்த பக்தியோடு ஒருவன் பின்பற்றுவானுனல், உண்மையாகவே அவன் கடவுளை அடைவான். ஒருவன் ஏற்றுக்கொண்டுள்ள மதத்தில் எவையோ சில பிழைகள் இருப்பதாகவே வைத்துக் கொள்வோம்; ஒருவனிடம் உண்மையான சிரத்தை மட்டும் இருக்குமாயின், இறைவனே அந்தப் பக்தனிடமுள்ள பிழைகளைத் திருத்தி அருள்புரிவான்.




## திருவெம்பாவை—தத்துவ விளக்கம்

ராஜம் ஜயராமன்

மார்கழி மாதத்தில் திருவாதிரைக்கு முதல் பத்து நாள் தொடங்கி வைகறைப் பொழுதில் கன்னிப் பெண்கள் துயில் எழுவார்கள். மற்றப் பெண்களின் இல்லங்களுக்குச் சென்று தமது தோழிகளைத் துயில் எழுப்புவார்கள். பிறகு அனைவரும் சேர்ந்து சிவபெருமானது புகழைப் பாடி நீர் நிலைகளுக்குச் சென்று நீராடுவார்கள். இந்தப் பழமையான வழக்கத்தை அடிப்படையாகக் கொண்டு உரையாடல் முறையிலும், வணங்கி வாழ்த்தும் முறையிலும் திருவெம்பாவைப் பாடல்கள் அமைந்துள்ளன. எம்பாவாய் என்ற சொல் ஒவ்வொரு பாடலின் முடிவிலும் வருகிறது. அது காரணமாகத் திரு என்ற அடைமொழியுடன் 'திருவெம்பாவை' என இந்தப் பாடல்கள் வழங்கப்பெறுகின்றன.

### திருவெம்பாவையின் அமைப்பு

இந்தப் பாடல்களில் முதற் பகுதி ஒருவரை ஒருவர் துயில் எழுப்புவதாகவும், இரண்டாவது பகுதி பொய்கையில் நீராடுவதாகவும் அமைந்திருக்கின்றன.

கன்னிப் பெண்கள் ஒருவரை யொருவர் இல்லந்தோறும் சென்று எழுப்பும் விதத்தில் முதல் எட்டுப் பாடல்கள் அமைந்துள்ளன. ஒன்பதாவது பாடல் இறைவனைப் பிரார்த்திப்பதாகவும், பத்தாவது பாடல் முதற் கொண்டு இருபது பாடல் வரையிலும் பொய்கையில் நீராடுவதாகவும் அமைந்துள்ளன.

'திருவெம்பாவை'ப் பாடல்களுக்கு, 'சக்தியை வியந்தது' என்ற தலைப்பு, திருவாசகத்தில் தரப்பட்டுள்ளது. 'சக்தி' என்பது இறைவனின் திருவருளைக் குறிப்பிடுகிறது. இறைவனை அடைவதற்கு அவரது திருவருள் சக்தியே காரணம். எனவே 'சக்தியை வியந்தது' என்றே மாணிக்கவாசகர் திருவருள் திறனைப் புகழ்கிறார்.

### தத்துவ விளக்கம்

திருவெம்பாவைப் பாடலுக்குத் தத்துவ முறையிலும் விளக்கம் இருக்கிறது. பக்குவம் முதிர்ந்த ஆன்மா, மல இருளில் அழுந்தித் தாமஸ உறக்கமான ஆன்ம உறக்கத்தில் கிடக்கும் பக்குவம்பெறாத ஆன்மாக்களைத் துயிலெழுப்பி இறைவனது 'அருட் புனலில் திளைப்பதற்கு அழைத்துச் செல்கிறது. இதனை, ''மல இருள் உற்று உறங்காமல் மன்னு பரிபாகர் அருள் செல முழுக வருகவெனச் செப்பல் திருவெம்பாவை.'' என்று 'திருப்பெருந்துறை'ப் புராணம் குறிப்பிடுகிறது.

மார்கழி மாதம் தேவர்களுக்கு உதய காலம் என்பர். மேலும், மார்கழியை ஓர் அளவாக (பிரமாணமாக)க் கொண்டு, முதல் ஆறு மாதம் சிருஷ்டி காலம் என்றும், அதற்கு அடுத்த ஆறு மாதம் சங்கார (அழிவு) காலம் என்றும் சொல்கிறார்கள். மார்கழி மாதம் தேவர்கள் பிரபஞ்ச சிருஷ்டியைத் துவங்குவதற்கு ஏதுவான உதய காலமாகத் திகழ்கிறது. அப்போது வசந்த காலம் ஆரம்பிக்கிறது.

### பிரபஞ்ச காரியம் நடக்கும் முறை

சதாசிவ மூர்த்தி தமது திருவருளால் மனோன்மணி என்ற சக்தியைத் தோற்றுவிக்கிறார். மனோன்மணி மற்றச் சக்திகளான சர்வபூத தமனி, பலப் பிரதமனி, பலவிகரணி, கலவிகரணி, காளி, ரௌத்திரி, சேட்டை, வாமை என்ற எட்டுப் பேரையும் (சக்திகளையும்) எழுப்புகிறது. இவற்றுள் முன் இருக்கும் சக்தி தனக்கு அடுத்ததாக இருக்கும் சக்தியைத் துயிலெழுப்புகிறது. இவ்விதம் ஒரு சக்தி மற்றொரு சக்தியை எழுப்ப, முடிவில் எல்லாச் சக்திகளும் சேர்ந்து செயற்பட ஆரம்பிக்கின்றன. இந்த நவ சக்திகள் ஒன்றை ஒன்று செலுத்த, மாயையை ஆதாரமாகக் கொண்டு அனந்தேச்வரரால் அசுத்த மாயை செயற்பட்டுப் பிருதிவி முதலிய தத்துவங்கள் தோன்றிப் பிரபஞ்ச காரியம் நடைபெறுகிறது.



மகேச்வர தத்துவத்தில் சக்தி மண்டலத்தில் இருக்கும் மனோன்மணி சக்தியே முதலில் எழுகிறது. மனோன்மணி சக்தி எழுந்ததும் அவள் சர்வபூத தமனி என்ற சக்தியை எழுப்புகிறாள். திருவெம்பாவையில் முதற் பாடலாகிய 'ஆதியும் அந்தமும்' என்ற பாடல் மனோன்மணி சக்தி சொல்வதாக, சர்வபூத தமனியின் செயலை உணர்த்துகிறது.

இறைவனது புகழைக் கேட்டும் பக்குவம் பெறாத ஆன்மாக்கள் மல இருளில் அழுந்திக் கிடக்கும். இந்த உண்மையை, 'யாம் பாடக் கேட்டேயும் வாள்தடங்கண் மாதே வளருதியோ' என்று மனோன்மணி என்ற சக்தி, சர்வபூத தமனி என்ற சக்தியைக் கேட்பதிலிருந்து அறியலாம்.

ஏனெனில், சர்வபூத தமனி என்ற சக்தி ஆன்மாக்களின் புண்ணிய பாவங்களை அடக்கும் தொழிலைச் செய்கிறாள். அவளே ஆன்ம மூர்த்தியான உருத்திரருக்குச் சக்தியாக விளங்குபவள். ஆதலால், மனோன்மணி சக்தி முதலில் சர்வபூத தமனியை எழுப்புவது, பக்குவம் பெறாத ஆன்மாக்களை எழுப்புவதாகும்.

பின்பு இருவரும் சென்று, பலப் பிரதமனி என்ற சக்தியை எழுப்புகிறார்கள். 'பாசம் பரஞ்சோதி' என்ற இரண்டாவது பாடல் சர்வபூத தமனி சொல்வதாக, பலப்பிரதமனியின் செயலை உணர்த்துகிறது.

சர்வபூத தமனி, பலப் பிரதமனியிடம், ''ஜோதி வடிவத்தில் திகழும் இறைவனைப் பற்றி நாம் இரவும் பகலும் பேசும்போதெல்லாம் உன்னுடைய பற்றெல்லாம் (ஈடுபாடு முழுவதும்) அவனுக்கே உரியது என்று சொல்வாய். இப்போது படுக்கையின் மீது உனக்குப் பற்றுதல் வந்துவிட்டதோ?'' என்று கேட்கிறாள்.

'பாசநீக்கம் செய்ய வேண்டிய நீயே பாசம் வைத்திருக்கிறாயா?' என்ற குறிப்பால் பலப்பிரதமனி தனது செயலைச் செய்யும்படி சர்வபூத தமனி தூண்டுகிறாள். பலப் பிரதமனி—பலத்தை அதாவது பாசத்தின் வலிமையை அழிப்பவள் என்று பொருள். இந்தச் சக்தி சூரிய மூர்த்தியாகிய உருத்திரருக்குச் சக்தியாக விளங்குபவள். சூரியன் தன் உஷ்ண கிரணத்தினால் பலத்தை அழிப்பது போல, இவள் ஆன்மாக்களின் பாசத்தை நீக்குகிறாள். ஆன்மாக்களிடம் பாச நீக்கத்தைச் செய்யத் தூண்டும்படி இந்தச் சக்தியை எழுப்பும் குறிப்பாக இந்தப் பாடல் அமைந்துள்ளது.

அடுத்து மூவரும் சேர்ந்து சென்று, பலவிகரணி என்ற சக்தியை எழுப்புகின்றனர். 'முத்தன்ன வெண் நகையாய்' என்ற மூன்றாவது பாடல் பலப் பிரதமனி சக்தி வாயிலாக, பலவிகரணி என்னும் சக்தியின் செயலை உணர்த்துகிறது. இவளது செயல் ஆன்மாக்களுக்கு விசேஷமான பலத்தை (பயனை)க் கொடுப்பதாகையால் அத

ளைப் பாராட்டி, 'எத்தோ நின் அன்புடைமை' என்று கூறுகின்றனர். மேலும் அவளிடம், 'உன்னை எழுப்ப வந்த எங்களுக்குச் சிவனைப் பாடும் மனச் செம்மையைத் தர வேண்டும்' என்று கேட்டுக் கொள்கின்றனர்.

இந்தப் பலவிகரணி என்ற சக்தி சந்திர மூர்த்தியாகிய மகாதேவருக்குச் சக்தியாய் விளங்குபவள். சந்திரன் பயிரை வளர்ப்பது போல், பலவிகரணி சக்தி ஆன்மாக்களாகிய பயிரை வளர்ப்பவள். பலவிகரணி—பலத்தை விசேஷமாகக் கொடுப்பவள் என்பது பொருள்.

அடுத்து நால்வருமாக, கலவிகரணி என்ற சக்தியை எழுப்புகின்றனர். 'ஒண்ணித்தில நகையாய்' என்னும் நான்காம் பாடல் பலவிகரணி சக்தி சொல்வதாக, கலவிகரணி என்ற சக்தியின் தொழிலை உணர்த்துகிறது.

கலவிகரணி என்ற சக்தி ஆகாயத் தத்துவராகிய பீமருக்குச் சக்தியாய் விளங்குபவள். ஆகாயம் உருவமற்றது. எனவே கலவிகரணி சக்தியும் ஆகாய மூர்த்தியாய் வியாபித்திருக்கிறாள். கலா—அவயவம், விகரணி—இல்லாதவள், உருவமற்றவள். பீமர்—மூவுலகங்களும் பயப்படத் தக்கவர்.

உருவமற்ற ஆகாயமூர்த்தியாகிய கலவிகரணியிடம் சென்ற நால்வரும், எங்கும் நிறைந்திருக்கும் இறைவனின் கருணை, பெருமை, அழகு ஆகியவற்றை வியந்து, 'விண்ணுக்கு ஒரு மருந்தை, வேதவிழுப் பொருளை, கண்ணுக்கு இனியவனை' என்று அவனது பெருமையைப் போற்றுகிறார்கள். மூன்று உலகிலும் வியாபித்திருக்கும் ஒலி வடிவமாகிய கலவிகரணியை ஆன்மாக்களை ஒன்றுசேர்த்து இறைவன் புகழைப் பாட வைக்கும்படி கேட்கின்றனர்.

அடுத்து, ஐவருமாகக் காளி என்ற சக்தியை எழுப்புகிறார்கள். 'மால் அறியா நான்முகன்' என்ற ஐந்தாவது பாடல் கலவிகரணி சக்தி சொல்வதாகக் காளி என்ற சக்தியை உணர்த்துகிறது. காளி என்ற சக்தி வாயு வடிவிலுள்ள ஈசானருக்குச் சக்தியாக இருப்பவள். இவள் ஈசுவர தத்துவம் வரை வியாபித்திருக்கிறாள். (ஈசானர்-ஐசுவரியம் உடையவர்.)

சிறிது சிறிதாகத் தமோகுணத்தை நீக்கி, இறைவனைக் காண முயலும் ஆன்மாவுக்கு, தற்போதம் (தான் என்ற ஆணவம்) தலை எடுக்காமல் அருளும்படி காளியிடம் வேண்டும் கருத்தைத் திருவெம்பாவையின் ஐந்தாம் பாடல் உணர்த்துகிறது.

அடுத்து, ஆறு பேரும், ரௌத்திரி என்ற சக்தியை எழுப்புகின்றனர். 'மானே நீ நென்னலை' என்னும் ஆறுவது பாடல் காளிசக்தி சொல்வதாக ரௌத்திரி என்ற சக்தியை உணர்த்துகிறது.

ரௌத்திரி என்ற சக்தி அக்கினி வடிவமாகிய பசுபதிக்குச் சக்தியாய் விளங்குகிறாள். (பசுபதி-ஆன்மாக்களுக்குத் தலைவன்.) இவள் சங்கார கிருத்தியத்திற்கு (அழித்தல் செயலுக்கு) ஆதாரமானவள்.

தமோகுண மிகுதியால் தீயொழுக்கம் கொண்ட ஆன்மாக்களின் கீழான இயல்புகளை அழித்து ஆன்மாக்களுக்குத் தலைவனை இறைவன் தானே வந்து ஆட்கொள்ளுகிறான். அத்தகைய பெருமான் எம்மையும் ஆட்கொண்டு அருளினான் என்ற கருத்தைத் திருவெம்பாவையின் ஆறாம் பாடல் உணர்த்துகிறது.

பிறகு, ஏழு பேரும் சென்று, சியேட்டை என்ற சக்தியை எழுப்புகின்றனர். 'அன்னே இவையும்' என்று தொடங்கும் ஏழாவது பாடல் ரௌத்திரி என்ற சக்தி சொல்வதாக, சியேட்டை என்ற சக்தியின் செயலை உணர்த்துகிறது. இந்தச் சக்தி காத்தல் தொழிலுக்கு ஆதாரமாக இருப்பவள். காலதத்துவம் வரையில் அவள் வியாபித்திருக்கிறாள். ஜலரூபராகிய பவருக்கு அவள் சக்தியாக விளங்குபவள். (பவர்-எல்லாவற்றையும் தோற்றுவிக்கும் சக்தி.)

இறைவனிடம் பேரன்பு கொண்டிருந்தபோதிலும் அவனது திருவருள் இல்லையேல் தமோகுண உறக்கம் ஏற்பட்டுவிடும். எனவே இந்த நிலை ஏற்படாமல் ஆன்மாக்களைக் காத்தருளும்படி திருவெம்பாவையின் ஏழாம் பாடல் அமைந்துள்ளது.

அடுத்து எட்டுப் பேரும் சேர்ந்து சென்று, வாமை என்ற சக்தியை எழுப்புகின்றனர். 'கோழி சிலம்ப' என்ற எட்டாவது பாடல் சியேட்டை சக்தி சொல்வதாக வாமை என்ற சக்தியின் செயலை உணர்த்துகிறது. இந்தச் சக்தி சிருஷ்டித் தொழிலை விருத்தி செய்பவள். பிருதிவி தத்துவரூபரான சர்வருக்குச் சக்தியாக விளங்குபவள். (வாமை-அழகுள்ளவள். சர்வர்-எல்லாமுடையவர்.)

கோழி கூவுவதும், பறவைகள் ஒலி எழுப்புவதும், இசைக் கருவிகள் இசைப்பதும், வெண்சங்கு முழங்குவதும் பொழுது புலர்வதை அறிவிக்கின்றன. இவை பிருதிவி தத்துவத்தில் இயற்கையின் சிருஷ்டித் தொழிலை, சூட்சுமமாகத் தெரிவிக்கின்றன. பிருதிவி தத்துவத்தில் சிருஷ்டித்தொழிலைச் செய்யும்படி வாமையை எழுப்பும் விதத்தில் எட்டாவது பாடல் அமைந்துள்ளது.

இதுவரை, நவசக்திகள் ஒன்றுசேர்ந்து பிரபஞ்ச காரியம் நடத்தும் முறை சொல்லப்பட்டது. இதன் விளக்கம் பின் வருமாறு:—

பணிவோம்; அஷ்ட வித்தியேசுவரருக்குத் துணையாக இருப்போம்; சப்த கோடி மகாமந்திரேச்வரர்கள் எங்களுக்குத் தலைவர் ஆவார்கள்; அவர்களின் ஏவலால் சுத்த மாயையைத் தோற்றுவிக்கும் உரிமை எங்களை விட்டு நீங்காமலிருக்க அருள் புரிந்தால் எங்களுக்குக் குறைபாடு ஏதும் இராது'' என்று கூறுகிறார்கள். இந்தக் கருத்தமைந்த திருவெம்பாவைப் பாடல், 'உன்னைப் பிரானாக' என்று தொடங்கி, 'இன்ன வகையே எமக்கு எம்கோன் நல்குதியேல், என்ன குறையும் இலோம் ஏல்ஓர் எம்பாவாய்' என்று முடிகிறது.

மேற்கண்ட பாடலில் மாணிக்கவாசகர் மிகவும் தெளிவாகச் சுத்த மாயையில் சுத்த வித்தையில் இருந்து பிரபஞ்ச காரியம் நடக்கும் வரை உள்ள விவகாரிகத்தைக் குறிப்பிடுகிறார்.

எனவே கன்னிப் பெண்கள் அடியார்களைக் கணவனாகப் பெற வேண்டி மட்டும் இந்தப் பாடலைப் பாடியதாகப் பொருள் கொள்வது தவறாகும். மாணிக்கவாசகர் நவசக்திகளையும், அவர்களுக்குத் தலைவர்களாக இருக்கும் விஞ்ஞானகலரையும் குறிப்பிட்டுள்ளதாக இந்தப் பாடலுக்குப் பொருள் கொள்வதுதான் தத்துவத்திற்குப் பொருந்தும்.

**மனோன்மணி—சதாசிவர்**

| சக்திகள் | அஷ்டமூர்த்திகள் | அவர்களின் பெயர்கள் | தத்துவங்கள் |
|---|---|---|---|
| சர்வபூததமனி | ஆன்மமூர்த்தி | உக்கிரர் | ஆன்மா (சிவ தத்துவம்) |
| பலப்பிரதமனி | சூரியமூர்த்தி | ருத்திரர் | சூரியன் (சிவ தத்துவம்) |
| பலவிகரணி | சந்திரமூர்த்தி | மகாதேவர் | சந்திரன் (சிவ தத்துவம்) |
| கலவிகரணி | ஆகாயமூர்த்தி | பீமர் | ஆகாய தத்துவம் |
| காளி | வாயுமூர்த்தி | ஈசானர் | ஈசுவர தத்துவம் |
| ரௌத்திரி | அக்கினிமூர்த்தி (சங்காரம்) | பசுபதி | சுத்தவித்யா தத்துவம் |
| சியேட்டை | ஜலமூர்த்தி (காத்தல்) | பவர் | கால தத்துவம் |
| வாமை | பிருதிவி தத்துவம் (சிருஷ்டி) | சர்வர் | அராக தத்துவம் |

அடுத்து ஒன்பது சக்திகளும் ஒன்று சேர்ந்து முதல்வனைப் போற்றி வேண்டும் பாடலாக ஒன்பதாவது பாடல் திகழ்கிறது.

இதில் அவர்கள், ''தேவரீருடைய அடியார்களாகிய அணு சதாசிவர் தாள்

விஞ்ஞானகலரில் ஒரு வகையினரான அணுசதாசிவரின் தாள் பணிவோம் என்றும், அஷ்ட வித்தியேச்வரர்களுக்குத் துணையாவோம் என்றும், சப்த கோடி மகாமந்திரேச்வரர்கள் எமக்குத் தலைவர் ஆவார்கள் என்றும், அவர்கள் சொன்ன பரிசே தொழும் பணியாய்ச் செய்வோம் என்றும், அவர்களின் ஏவலால் அசுத்த மாயையைத் தோற்றுவிப்போம் என்றும் நவசக்திகள் சொல்வதுதான் திருவெம்பாவைப் பாடல்களின் உட்கருத்தாக அமைந்திருக்கிறது.



திருவெம்பாவை பத்தாவது பாடலில் இறைவனின் பெருமை சொல்லப்பட்டிருக்கிறது. மேலும், அதில் அரன் எனும் நாமத்தைக் கொண்ட சிவபெருமானுக்கு ஆலயமான சுத்த மாயையில் சுத்த த்விதையில் இருந்துகொண்டு பிரபஞ்ச காரியத்தைச் செய்யும் பணிப் பெண்களாக வாமை முதலிய சக்திகள் பணி புரிகின்றனர். இதை அவர்கள் ஒருவரை ஒருவர் அழைப்பதாக வரும் 'அரன்தன் கோயிற் பிணாப் பிள்ளைகாள்' என்ற தொடர் விளக்குகிறது.

பதினோராவது பாடல் முதல் இருபதாம் பாடல் வரையிலும் கன்னிப் பெண்கள் பொய்கையில் நீராடுவதாக அமைந்துள்ளன. இந்தப் பாடல்களில் அம்மையப்பனைப் பூம்புனலாகவும், அந்தப் புனலில் நீராடும் அடியார்களுக்கு ஏற்படும் இறையின்பமும், மகாபாவமும் விளக்கப்படுகின்றன. இத்தகைய அடியார்களை இறைவனே வந்து வலிய ஆட்கொண்டு திருவடி இன்பம் அளிப்பான் எனக் கூறப்படுகிறது. பின்பு இவர்கள் தன்மையையும், இவர்கள் இறைவனது ஜோதி சொரூபத்தில் ஆன்மசொரூபத்தை இழந்து நிற்பதையும் விளக்குகிறது.

நிர்க்குண வடிவான இறைவன் குணத்தோடு கூடி வந்து பிரபஞ்ச கிருத்தியங்களைச் செய்கிறான். இதன் மூலம் ஆன்மாக்களை ஆன்ம உறக்கத்திலிருந்து எழுப்பிச் சிவப்பேற்றைத் தருகிறான். இதுவே திருவெம்பாவையின் தத்துவ விளக்கமாக அமைந்துள்ளது.

திருவெம்பாவையன் சிறப்பை உணர்ந்த நம் முன்னோர், திருவாதிரைத் திருநாளை 'மாணிக்கவாசகர் விழா' என்று ஏற்படுத்தி, அப்போது திருமுறைகளை ஓதாமல் திருக்காப்பிட்டு வைத்துத் திருவெம்பாவையை மட்டும் ஓதுதல் வேண்டும் என்ற மரபை ஏற்படுத்தினர்.

## உணவளிக்கும் உழவன்



ஏரைப் பூட்டி ஆழ உழுகிறான் உழவன். எருதுகளுக்குத் தீனியிட்டு வளர்த்து வேளாண்மை செய்பவனே உலகுக்கு உணவளிப்பவன். மேகம் தேனுக மழையைப் பொழிந்தாலும், பயிர்த் தொழில் செழிக்காவிட்டால் உணவு ஏது? இன்பம் ஏது?

—ரிக்வேதம், 4-7

# பாமர மக்களின் எழுச்சி

**சுவாமி விவேகானந்தர்**

உயர்சாதி மக்களின் வலிமை முழுவதும் அவர்கள் பெற்றிருக்கும் கல்வியறிவிலும் பண்பாட்டிலும் அடங்கியிருக்கிறது. தாழ்ந்த சாதி மக்களும் அவற்றைக் கைக்கொள்வது ஒன்றே சாதி வித்தியாசத்தை நீக்கிச் சாதிச் சமத்துவத்தை ஏற்படுத்தும் வழியாகும்.

ஏழை விவசாயிகள், தொழிலாளிகள் ஆகியோருக்கும் பணக்காரர்களுக்கும் இடையில் சச்சரவு ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

சிலருக்கு மட்டும் தனி உரிமை என்பது மனித குலத்திற்கே ஒரு சாபக் கேடாகும். எப்போதெல்லாம் ஒரு சிலர் மட்டும் விசேஷ உரிமைகளைப் பெற்று அனுபவிப்பது என்பது தகர்க்கப்படுகிறதோ, அப்போதெல்லாம் அந்த இனத்தின் மக்கள் அதிக அளவில் முன்னேற்றம் பெறுகிறார்கள். எவருக்கும் எந்தவிதமான தனி உரிமையும் அறவே இருக்கக்கூடாது.

சிலர் இயல்பாகவே தங்களுக்கு உள்ள ஆற்றல் காரணமாக மற்றவர்களை விட அதிகச் செல்வம் சேர்க்கக் கூடியவர்களாக இருப்பார்கள்; அது இயற்கையும் ஆகும். ஆனால் அவர்கள் இந்த ஆற்றல் காரணமாக, பணம் சேர்க்கும்பொருட்டு, அவர்களைப் போல அதிகப் பணம் சேர்க்க இயலாத மற்றவர்களைக் காலால் நசுக்குவதோ, அவர்களைக் கொடுமைகளுக்கு உட்படுத்துவதோ நியாயமான செயல் அன்று. இந்த நியாயமற்ற செயலை எதிர்த்துத்தான் போராட்டம் நடைபெறுகிறது. மக்களில் பெரும்பான்மையினருக்குக் கிடைக்காத நன்மைகளைச் சிலர் மட்டும் விசேஷச் சலுகை என்ற பெயரில் அனுபவிப்பதுதான் தனியுரிமையாகும். இவ்விதம் சிலர் மட்டும் தனியுரிமை பெற்றவர்களாக இருக்கக்கூடாது என்பதேதான் எல்லாக் காலத்திலும் நீதி நெறிகளின் இலட்சியமாக இருந்து வருகிறது. இது சமுதாயத்தை ஒற்றுமையையும் சமத்துவத்தையும் நோக்கி அழைத்துச் செல்கிறது. இயல்பாக மக்களிடையே அமைந்திருக்கும் வேற்றுமையை அழிக்காமலே சமுதாயத்தை ஒற்றுமைக்கும் சமத்துவத்திற்கும் நீதி நெறிகள் அழைத்துச் செல்கின்றன.

ஒவ்வொரு தனியுரிமையையும், தனியுரிமைக்குக் காரணமான எல்லாவற்றையும் காலால் மிதித்து நசுக்கிவிட்டு, மக்கள் அனைவரையும் சமமாக நினைக்கச் செய்யும் ஞானம் நாட்டில் தழைத்தோங்குவதற்காக நாம் அனைவரும் பணிபுரிவோமாக.



ஒரு புழு தனது கூடான சிப்பிக்குள் சென்று நுழைந்து கொள்கிறது. அது போல, நமது மக்களும் குறுகிய மனப்பான்மை கொண்டு, தங்களிடம் 'இருக்கும் அருமணி போன்ற ஆன்மிகக் கருத்துக்களை மற்றவர்களுக்குக் கொடுக்க மறுத்தனர். இதுவே இந்தியாவின் வீழ்ச்சிக்கும் தாழ்விற்கும் உரிய முக்கியக் காரணமாகும்.

ஒருவருக்கு ஒருவர் கொடுப்பதும் வாங்குவதும்தான் இயற்கையிலுள்ள விதியாகும். இந்தியா மீண்டும் ஒரு முறை தனது உயர்ந்த நிலையைப் பெற விரும்பினால், அது தன்னிடமுள்ள அரும் பெரும் ஆன்மிகப் பொக்கிஷங்களை வெளிக் கொண்டு வந்து ஏனைய உலக நாடுகளிடையே பரப்பியாக வேண்டும். அதற்குப் பதிலாக மற்ற நாடுகள் கொடுப்பதையும் பெறத் தயாராக இருக்க வேண்டும். இது முற்றிலும் இன்றியமையாததாகும்.

எப்போதும் விரிந்து மலர்ந்துகொண்டே இருப்பதுதான் வாழ்க்கையாகும். சுருங்கி விடுவது மரணம்தான்.

மேலைநாட்டு விஞ்ஞானத்தோடு இணைந்த வேதாந்தமும் பிரம்மசரியமும், வாழ்க்கையின் அடிப்படை இலட்சியங்களாக நமக்குத் தேவைப்படுகின்றன. அத்துடன் சிரத்தையும் தன்னம்பிக்கையும் கொண்டவர்களாக நாம் விளங்க வேண்டும்.

சமத்துவ உணர்வு, சுதந்திரம், செயல் புரியும் திறமை, ஆற்றல் ஆகியவற்றில் மேலை நாட்டினரை விடவும் நாம் சிறந்து விளங்க வேண்டும்; அதே சமயத்தில் ஆன்மிகப் பண்பாட்டிலும் உணர்வுகளிலும் முழு அளவில் ஹிந்துக்களாகவே நாம் திகழ வேண்டும்—இதை உங்களால் செய்ய இயலுமா?

ஆற்றல்களை வீணுகச் சிதறவிடுதல், பயனற்ற சோம்பேறித்தனமான பிதற்றல்களில் அடிக்கடி திளைத்தல் ஆகியவற்றை அகற்றி, ஆங்கிலேயரிடமிருந்து தலைவர்களுக்குக் கீழ்ப்படிந்து பணிபுரிதல், வெல்லுதற்கரிய விடாமுயற்சி, பொறாமையின்மை, அழியாத தன்னம்பிக்கை ஆகிய பண்புகளை நாம் கற்றுக்கொள்ள வேண்டியது முற்றிலும் அவசியமாகும். அதிகாரம் செலுத்துவதற்கு முன்னுல் கீழ்ப்படிந்து நடப்பதை ஒவ்வொருவரும் கற்றுக்கொள்ள வேண்டும். ஹிந்துக்களிடமிருந்து பொறாமை அகலாத வரையில்—ஹிந்துக்கள் தலைவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்காத வரையில்—வலிமையுடன் இருந்து மக்களுக்கு வழிகாட்டக்கூடிய ஸ்தாபனம் இந்தியாவில் இயங்குவதற்கு வழியில்லை. ஐரோப்பாவிடமிருந்து புற உலகத்தைப் பற்றிய விஷயங்களையெல்லாம் இந்தியா கற்றுக்கொள்ள வேண்டும். இந்தியாவிடமிருந்து அக உலகமாகிய ஆன்மிகம் பற்றிய விஷயங்களையெல்லாம் ஐரோப்பா கற்றுக்கொள்ள வேண்டும். நாம் மனிதகுலத்தின் ஒரு பகுதியாக விளங்கும் அக உலகம் பற்றிய உண்மைகளைப் பேணி வளர்த்தோம். மனிதகுலத்தின் மற்றொரு பகுதியாக விளங்கும் புற உலகம் பற்றிய விஷயங்களை ஐரோப்பியர் பேணி வளர்த்தார்கள். இந்த இரண்டின் சேர்க்கைதான் இப்பொது இந்தியாவிற்குத் தேவைப்படுகிறது.

ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு நாடும் பெருமை அடைவதற்கு மூன்று விஷயங்கள் அவசியம்:— 1. நன்மை தரக்கூடிய சக்திகளில் உறுதியான நம்பிக்கை, 2. பொறாமையும் சந்தேகமும் இல்லாமலிருத்தல், 3. நல்லவர்களாக இருக்கவும் நன்மை செய்யவும் முயற்சி செய்யும் அனைவருக்கும் உதவிபுரிதல்.

பொறாமையை ஒழியுங்கள்; இன்னும் செய்ய வேண்டியிருக்கும் பெரிய வேலைகளையெல்லாம் செய்யும் ஆற்றல் பெறுவீர்கள்.

முதலில் பொறாமையை ஒழியுங்கள். யாரைப் பார்த்தும் பொறாமைப்படாதீர். நல்ல செயல்களில் ஈடுபடும் ஒவ்வொருவருக்கும் கைகொடுத்து உதவிசெய்யத் தயாராக இருங்கள். மூவுலகிலும் இருக்கும் ஒவ்வொரு ஜீவனுக்கும் நல்ல எண்ணத்தை வழங்குவாயாக.

வளர்ச்சியடைவதும் உலகம் முழுவதும் பரவுவதும் நமது இலட்சியமாகும். அன்பு, நேர்மை, பொறுமை ஆகியவற்றைத் தவிர வேறொன்றுமே நமக்குத் தேவையில்லை.

எல்லையற்ற தைரியத்தோடும் வெல்ல முடியாத மனவலிமையோடும் கர்மயோகம் செய்வதில் தீவிரமாக ஈடுபட வேண்டும். அப்படிச் செய்தால்தான் பாரதநாட்டு மக்கள் விழித்தெழுவார்கள்.

என் மகனே! உனக்கு என் சொற்களில் ஏதாவது மரியாதை இருக்குமானுல், முதலாவதாக உன் அறையின் எல்லாக் கதவுகளையும் ஜன்னல்களையும் திறந்துவிடு. இதுவே நான் உனக்குத் தரும் முதல் அறிவுரையாகும். கீழ்நோக்கிச் சென்றபடியும் துன்பத்தில் மூழ்கியபடியும் ஏராளமான ஏழை மக்கள் நீ வாழும் பகுதியில் வாழ்ந்து கொண்டிருக்கிறுர்கள். நீ அவர்களை அணுகிச் சென்று ஆர்வத்தையும் உற்சாகத்தையும் செலுத்தி அவர்களுக்குத் தொண்டு செய். நோய்வாய்ப்பட்டவர்களுக்குத் தேவையான மருந்து வகைகளை வழங்க ஏற்பாடு செய். முழுக் கவனத்தையும் செலுத்தி அந்த நோயாளிகளுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய். பசியால் வாடுபவனுக்கு உணவு கொடு. அறியாமையில் உள்ளவனுக்கு உன்னுல் முடிந்த அளவிற்குக் கல்வியறிவைப் புகட்டு. என் மகனே! நான் உனக்குச் சொல்கிறேன்—இந்த முறையில் உன் சகோதரர்களாகிய மக்களுக்கு நீ தொண்டு செய்ய ஆரம்பிப்பாயானுல், நிச்சயமாக உனக்கு அமைதியும் ஆறுதலும் கிடைக்கும்.

# ஆழ்வார் அமுதம்

## திருப்பாவையில் ஒரு பாசுரம்

மைதிலி வேணுகோபால்

**எழுக! எழுக!**

சம்சாரத்திலே உறங்குகிறவர்களை எழுப்பி, எம்பெருமான் தானே தன்னை ஆழ்வார்களிடம் காட்டிக்கொண்டான். ஆனுல், ஆண்டாளோ ஒரு படி மேலே போய், முதலில் தான் எழுந்து குளித்துத் தூய்மையாகிப் பின்பு தன் தோழி மார்களை எழுப்பி அழைத்துக்கொண்டு, கிருஷ்ணனின் வீட்டிற்குப் போய், அவனை எழுப்பி, அவன் அருளை வேண்டுகிருள்.



மற்றப் பெண்களைப் போல் இல்லாமல் சிறு வயதிலிருந்தே கிருஷ்ணனின் திருக்கல்யாண குணங்களில் ஈடுபட்டு, அவனை அடைவதையே தன் வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டு, முடிவில் அவனை அடைந்தும் விட்டாள்.

தான் கண்ட அனுபவத்தை நோன்பு என்ற சாக்கை வைத்துக்கொண்டு, ஒவ்வொரு ஜீவாத்மாவின் கடமை, லட்சியம், அதை அடைய நடுவே இருக்கும் தடைகள், அந்தத் தடைகளை எப்படித் தகர்த்து எறிய வேண்டும் என்பன போன்ற சிறந்த விஷயங்களைப் பாசுரங்களின் மூலம் மிகவும் அழகாக ஆண்டாள் எடுத்துக் கூறியிருக்கிருள்.

திருப்பாவையில் பன்னிரண்டாம் பாசுரமான 'கனைத்திளம்' என்பதைச் சற்றுப் பார்ப்போம்—

கனைத்திளம் கற்றெருமை கன்றுக்கிரங்கி
நினைத்து முலைவழியே நின்று பால்சோர,
நனைத்தில்லம் சேருக்கும் நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழநின் வாசல் கடைபற்றிச்
சினத்தினுல் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக்கு இனியானைப் பாடவும், நீ வாய்திறவாய்
இனித்தான் எழுந்திராய்; ஈதென்ன பேருறக்கம்?
அனைத்தில்லத்தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்.

''இளம் கன்றுகளையுடைய எருமை மாடுகள், பால் கறப்பாரின்றி, தம் கன்றுகளை எண்ணிக்கொண்டே தம் காம்புகளின் மூலம் இடைவிடாமல் பாலைச் சொரிந்துவிடுவதனுல் வீடே பால்சேருகிப் போய்விட்டது. அப்படிப்பட்ட நல்ல செல்வங்களையுடைய நற்செல்வனின் தங்கையே! பனி எங்கள் தலைகளில் பெய்கிறதே! உன் இல்லத்தின் வாசற்கதவைப் பிடித்துக்கொண்டு உன்னை நாங்கள் எழுப்புகிருேமே! தன் பக்தர்களுக்கு இன்னல் விளைவித்ததனுல், தென்னிலங்கை அரசன் ராவணன் மீது கோபமுற்று அவனை முடித்தவனும், எண்ணிப் பார்த்தாலே மனதுக்கு இன்பமானவனுமான ராமனை நாங்கள் பாடப்போகிருேம். நீ மட்டும் எழுந்திருந்து வராமல் இன்னும் உறங்குகிருயே. வாய் திறவாமல் படுத்திருக்கிருயே! மற்ற அனைத்து இல்லத்தாரும் எழுந்துவிட்டனரே. இனியாவது எழுந்

திரு!'' என்று ஆண்டாள் தன் தோழியை எழுப்புகிறாள்.

எருமைகள் தாமே பாலைச் சொரியும் வரையில் அந்த நற்செல்வன் என்னதான் செய்துகொண்டிருந்தான்? நற்செல்வன் மிகவும் சிறந்த கிருஷ்ண பக்தன். ஸ்ரீகிருஷ்ண கைங்கரியத்திலேயே ஈடுபட்டு, எப்போதும் கிருஷ்ணனோடு கூடவே இருப்பதனால்தான், அவன் தன் ஜீவனத்தையும் மறந்தே போனான். பாலைக் கறந்து விற்று வந்து, மீந்த பாலுக்கும் சரியான ஏற்பாடுகள் செய்வது போன்ற குலத் தொழிலேயே அவன் மிகத் தொல்லை யாக எண்ணினான்.

'இனித்தான் எழுந்திராய்' என்பது உயி ரான வார்த்தை. சம்சாரம் என்ற கனவில் ஆழ்ந்துள்ள ஜீவனைத் தட்டி எழுப்பு கிறாள். சம்சார மாயை என்ற தூக்கத் திலிருந்து அவ்வளவு எளிதில் விழிப்பு வந்துவிடுமா என்ன? இந்தச் சம்சாரம் துக்கமயமானது; அதிலிருந்து விடுபட வேண்டும் என்ற எண்ணம் ஜீவாத் மாவுக்கு ஏற்பட வேண்டும், பொங்கி வர வேண்டும். ஐந்து எதிரிகளான. ஐந்து புலன்களையும் அடக்கி நம் வசப்படுத்தி, மனதிலிருந்து மாசுகளை அகற்ற வேண்டும். இது கொஞ்சம் கஷ்டமான காரியம்தான். கஷ்டப்பட்டு அவன் திருவடிகளை அடைந்து விட்டாலோ, பிறப்பு இறப்பு என்ற சுழலிலிருந்து நிரந்தரமாகத் தப்பிவிடலாம். அதைத்தான் யோசிக்க வேண்டும்.

நற்செல்வனின் வீட்டுக்குள்ளேயோ—பால் வெள்ளம். இவர்களின் தலைகளின் மேலேயோ—பனி வெள்ளம். எல்லோரின் உள்ளத்தில் பொங்குவதோ—பக்தி வெள்ளம்.



அந்தக் கிருஷ்ண பக்தி வெள்ளம் எதைத்தான் தராது? இந்த உலக வாழ்க்கைக்கு, சகல சௌபாக்கியங்களை யும் தரும். பிறவாத பேரின்பத்தையும் தரும். எல்லோரும் வாருங்கள், ஸ்ரீ கிருஷ்ணானுபவத்திற்கு. எழுக எழுக கிருஷ்ணனின் அருளை அடைய!

---



## தூய பொருள்கள் இவை

பிறந்த பசுங்குழந்தை தூய்மையானது. அறிவு தூயது, போற்றுதற்கு உரியது. கவிதை தூய்மை நிறைந்தது. பசு பவித்திர மானது.

சமூகத்தில் நன்னடத்தையுடன் வாழ்கிறவர்கள் தூயவர். நாட்டுக்காகத் தியாகம் செய்யும் வீரன் தூயவன். பலருக்கு நலம் விளைக்கும் செல்வம் தூயது.

செயல்திறமை தூயது, புஷ்டியளிக்கும் உணவு தூயது. ஆனந்தம் தூயது. குடும்பத்தைக் காக்கும் தலைவன் தூயவன். நல்வாக்கு எப்போதும் பவித்திரமானது. துயரத்தை நீக்கும் நண்பன் தூயவன்.

**—ஸாம வேதம், 9-1**

# வேதாந்தச் சிந்தனை

## அஷ்டாவக்கிர கீதை

'ஹரிணி'

அஷ்டாவக்கிர முனிவர் பின்வரும் வேதாந்த உண்மைகளை ஜனக மன்னனுக்குக் கூறினர்:—

அரசே! இரண்டற்றதும் அழிவற்றதுமாகிய ஆத்ம தத்துவத்தை நீ மிகவும் தெளிவாக உணர்ந்திருக்கிறாய். அவ்விதம் தன்னை அறிந்த தீரனுகிய உனக்குப் பணம் சேகரிப்பதில் எவ்விதம் ஆவல் ஏற்பட முடியும்? ஆத்மாவை உணராதவனுக்கு அல்லவா மோகம் காரணமாகப் பார்க்கும் பொருள்களிலெல்லாம் விருப்பம் உண்டாகும்?

'கடலில் அலைகளைப் போல இந்த உலகம் எதிலிருந்து தோன்றி வெளிப்படுகிறதோ, அதுவே நான் (அந்தப் பரப்பிரம்மமே நான்—ஸோஹம்)' என்று அறிந்த பிறகும் நீ ஏன் ஓர் ஏழையைப் போல ஓடுகிறாய்?

தாங்கள் இணையற்ற அழகு வாய்ந்த தூய ஞானசொரூபம் என்றும், ஆத்ம சொரூபம் என்றும் கேள்வியுற்றபோதிலும் மக்கள் சிற்றின்பத்தில் மிகுந்த ஆசையுள்ளவர்களாக இருந்து அசுத்தமடைகிறார்களே! அந்தோ கஷ்டம்!

இந்த உலக சிருஷ்டிகள் எல்லாவற்றிலும் தன்னையும், தன்னிடத்தில் சர்வ பூதங்களையும் அதாவது படைப்பு அனைத்தையும் காண்கிற (அறிந்த) முனிவனுக்கும்கூட மமகாரம் எனப்படும் 'என்னுடையது' என்ற நினைவு இருப்பது அதிசயத்திலும் அதிசயமே!

உத்தமமான அத்வைத நிலையில் நாட்டம் கொண்ட, மோட்சத்தில் விருப்பமுள்ள தீவிர முமுட்சுவும்கூட, காமவசப்பட்டுக் காதல்வலையில் சிக்கி அசுத்தமடைவதைப் பார்க்கும்போது ஆச்சரியமே மேலிடுகிறது அல்லவா?

மகாபுருஷர்கள் தங்கள் உடலைப் பிறருடைய உடல் இயங்குவது போலவே பார்க்கிறார்கள். ஆதலால் அவர்கள் மற்றவர் தம்மை இகழ்ந்தாலும் புகழ்ந்தாலும் அதற்காகக் கோபமோ மகிழ்ச்சியோ அடைவதில்லை.

இந்த உலகம் முழுவதையும் மாயாமயமாகவே காண்கிற நெஞ்சுறுதி கொண்டவன் மரணம் நெருங்கி வந்தபோதிலும் அஞ்சுவதில்லை.

எவனுடைய மனம் பற்றற்றதாக, விடுதலை பெற்றதாக இருக்கிறதோ அந்த ஆத்மஞான நிறைவைப் பெற்ற மகாத்மாவுக்கு நிகராக வேறு யாரைச் சொல்வது?

தமது இயல்பினாலேயே தோன்றுகிற இவை யாவும் உண்மையில் ஒன்றுமே இல்லை என்று அறிந்துகொண்ட உறுதியான மனம் படைத்தவனுக்குக் கொள்ளுவதற்கும் தள்ளுவதற்கும் என்னதான் இருக்கிறது?

இரட்டைகளும் ஆசைகளும் அகத்தின் மாசும் நீங்கப்பெற்றவனுக்கு, தற்செயலாக வரும் சுகானுபவத்தால் இன்பமோ துன்பமோ உண்டாவதில்லை.

உனக்கோ ஆத்மாவைத் தவிர வேறு எதனுடனும் தொடர்பு இல்லை. ஆகவே பரிசுத்தனுகிய நீ எதைத் துறந்துவிட விரும்புகிறாய்?

உடல்நினைவை மறந்து ஆத்மாவுடன் ஒன்றுபட்ட மனநிலையில் இருந்தபடியே ஆத்மாவில் லயமடைந்துவிடு.

ஜனகா! கடலிலிருந்து தோன்றும் குமிழிகளைப் போலவே ஆத்மாவாகிய உன்னிடமிருந்தே உலகம் உதித்துத் தோற்றமளிக்கிறது. இந்த உண்மையை அறிந்து ஏகவடிவினனாக அதாவது ஒன்றேயாகிய பரமாத்ம சொரூபமாக உன்னை நீ உணர்ந்து அந்த ஆத்மாவிலேயே ஒன்றிவிடு.

கயிற்றில் பாம்பு போலத்தான் வெளிப் படையாக உலகம் கண்முன்னால் தோன்று கிறது. அது ஒரு சத்-பொருள் அல்ல. ஆதலால் பரிசுத்தனாகிய உன்னிடம் உலகம் இல்லை என்ற உணர்வில் நிலை பெற்றபடியே ஆத்மாவில் லயமடைந்து விடுவாயாக.

மகனே! இன்ப துன்பங்களிலும் ஆசை நிராசைகளிலும் வாழ்விலும் மரணத்தி லும்கூட, சமநிலை நழுவாதவனாக இருப்பாயாக. நிறைந்த உள்ளத்துடன் பரிபூரணனாகவே இருந்து ஆத்ம சொரூபத் தில் கரைந்துவிடுவாயாக.

* * *

இவ்விதம் அஷ்டாவக்கிர மகரிஷியின் அருள்வாக்குகளைக் கேட்ட ஜனக மன்னன் பின்வருமாறு கூறினான்:—

முனிவரே! சுகபோக அனுபவங்களுடன் விளையாடுகிற விவேகமுள்ள ஆத்மஞானி யை இந்த உலகச் சுமையைச் சுமந்து கொண்டிருக்கும் சாதாரண மூட ஜனங் களுடன் ஒப்பிட்டுப் பேசுவது பொருத்தம் அல்லவே! உலகத்தை ஓர் இந்திர ஜாலக் காட்சியைப் போன்று விளையாட் டாகப் பார்க்கத் தெரியாமல் இன்ப துன்பங்களில் உழன்றுகொண்டிருக்கும் அஞ்ஞானிகளுடன், விவேகம் நிறைந்த ஆத்மஞானியை ஒப்பிடவே கூடாது.

ஐயனே! வானவெளியில் புகை படிந் திருப்பது போன்று தோன்றினாலும் புகை அங்கே படிவதில்லை. அது போலவே தத் துவம் உணர்ந்த ஞானியின் உள்ளத்தைப் புண்ணிய பாவங்கள் ஒருபோதும் தொடுவ தில்லை.

இந்த உலகம் முழுவதையும் ஆத்மா வாக உணர்ந்த பரமஞானி சமூக விதி முறைகளை யெல்லாம் கடந்த நிலையில் இருக்கிறான்.

பிரம்மா முதற்கொண்டு புல் பூண்டு வரையிலுமுள்ள நான்கு வகைப் படைப்புத் தொகுதிகளில், ஆத்மஞானி ஒருவன் மட்டுமே விருப்பு வெறுப்புக்களை முழு வதும் தியாகம் செய்யும் திறமை பெற்றவனாக விளங்குகிறான். இந்த உலகம் முழுவதற்கும் இறைவனாக, இரண் டற்றதாக விளங்குகிற பரம்பொருள் தானே என்பதை எவனோ ஒருவன் உணர்கிறான். அவ்விதம் உணர்ந்தவன் தன் இச்சையாகவே செயற்படுகிறான். அவன் எதனிடமும் பயப்படுவதில்லை.

குருதேவரே! நானே ஆகாயத்தைப் போன்ற எல்லையற்றவன்; அதிசயமான இந்த உலகமோ குடத்தைப் போன்ற ஒரு ஜடப்பொருள்—இந்த உண்மையைப் புரிந்துகொள்வதே ஞானம். ஆதலால் இந்த உலகத்தை ஏற்றுக்கொள்வதோ துறந்துவிடுவதோ நீக்குவது என்பதோ இல்லை.

பரந்த கடல் போன்றவன் நான்; இந்த உலகம் அலை போன்றது என்ற உணர்வே ஞானம். ஆதலால் இதை ஏற்பதோ துறப்பதோ முழுவதும் ஒழிப்பது என்பதோ இல்லை.

இந்தப் படைப்பு அனைத்திலும் இருப் பவன் நானே; இந்தச் சிருஷ்டி முழுவதும் என்னிடமே இருக்கிறது என்று உணர்ந்து கொள்வதுதான் ஞானம். ஆதலால் இதை ஏற்பதோ துறப்பதோ முழுவதும் ஒழிப்பது என்பதோ இல்லை.

எல்லையற்ற பெருங்கடலாகிய என்னி டம், உலகம் என்ற கப்பல், இயல்பான காற்றினால் இங்கும் அங்குமாக அலைக் கழிக்கப்பட்டு அல்லலுறுகிறது. ஆனால் அது காரணமாக எனக்கு எந்தவிதக் கலக்கமும் இல்லை.

எல்லையற்ற பெருங்கடலாகிய என்னி டம், இயல்பாகத் தோன்றும் காற்று வேகமாக வீசினாலும், அடங்கி அமைதி யாக இருந்தாலும் அது காரணமாக எனக்கு எந்தவிதக் குறைவோ நிறைவோ இல்லை.

எல்லையற்ற பெருங்கடலாகிய என்னி டம் இந்த உலகம் என்பது ஒரு கற்பனை மட்டுமே ஆகும். நான் உருவமற்றவன், அமைதியே வடிவானவன் என்ற ஞானத் தில் நிலைபெற்றிருக்கிறேன்.

என்ன ஆச்சரியம்! இந்த உலகமோ இந்திரஜாலம் போன்றது. நானோ உணர்வு மயமானவன். (சின்மாத்திர சொரூபன்) ஆதலால் எனக்கு எங்கே எவ்விதம் வெறுப்போ விருப்போ ஏற்படும்?



# சிறுவர் பகுதி

## சகவாசத்தின் விளைவு

நம்பி

பிரம்மதத்தன் காசியை ஆண்டபோது, போதிசத்துவர் அவனுக்கு அமைச்சராக இருந்தார். அரசனிடம் சிறந்த யானை ஒன்று இருந்தது. அதன் பெயர் அழகுச் செல்வி. அது நல்ல யானை; பண்பான யானை; பிறருக்கு எந்தத் தீங்கும் செய்யாத யானை.

ஒரு நாள் கொள்ளைக்காரர்கள் சிலர் யானையின் கட்டுத்துறையின் அருகே வந்து அமர்ந்து, கொள்ளையடிப்பது குறித்து உரையாடினார்கள். "இந்த வழியாகத்தான் துவாரம் போட வேண்டும். சுவரில் இப்படித்தான் கன்னம் வைக்க வேண்டும். கொள்ளையடித்துப் பொருள்களைத் தூக்கிச் செல்லும் முன்பு கடக்க வேண்டிய நீர்வழிப் பாதையையும் நிலவழிப் பாதையையும் ஒழுங்கு படுத்திக்கொள்ள வேண்டும். பொருள்களை அபகரிக்கும்போது கொலை செய்ய அஞ்சலாகாது. அப்போதுதான் யாரும் எதிர்க்க மாட்டார்கள். திருட்டுத் தொழிலில் ஈடுபட்டிருப்பவன் நல்லவனாய் இருப்பது கூடாது; நாணயமானவனாய் இருப்பது கூடாது; கொடுமை செய்யவும் வலிமையைக் காட்டவும் அவன் தயங்கலாகாது" என்று தங்களுக்கிடையே கருத்துக்களை அவர்கள் பரிமாறிக் கொண்டனர். பிறகு அவர்கள் பிரிந்து போய்விட்டார்கள்.

மறுநாளும் வந்து இவ்வாறே திருடர்கள் பேசினார்கள்; இதே மாதிரி பல தினங்கள் யானையின் கட்டுத்துறையருகில் கூடித் திருடர்கள் பேசி வந்தார்கள்.

திருடர்களின் கெட்ட பேச்சைக் கேட்டுக் கேட்டு யானை ஒரு முடிவுக்கு வந்தது. தனக்கு அறிவு ஏற்படச் செய்யும்பொருட்டுத்தான் இவர்கள் இங்கு வந்து கூடுகிறார்கள் போலும். எனவே இனி யாரிடமும் இரக்கம் காட்டக்கூடாது; கொடுமையாகவும் முரட்டுத்தனமாகவும் நடப்பது அவசியம் என்ற தீர்மானத் துக்கு வந்தது. அதன்படி நடக்கவும் செய்தது.

இந்த முடிவில் யானை இருந்த சமயத்தில், அதிகாலையில் யானைப்பாகன் யானையின் கட்டுத்துறைக்கு வந்தான். உடனே யானை அவனைத் துதிக்கையால் பற்றி இழுத்துக் காலின்கீழ் வைத்து மிதித்து நசுக்கிக் கொன்றுவிட்டது. இரண்டாவது மூன்றாவது மாவுத்தர்களுக்கும் இதே கதிதான் நேர்ந்தது. யானையை நெருங்கிய ஒவ்வொருவருக்கும் மாவுத்தருக்கு நேர்ந்த கதியே நேர்ந்தது.

யானை அழகுச் செல்வியின் போக்கைப்பற்றி அரசனிடம் தெரிவிக்கப் பட்டது. அருகில் செல்பவர்களை அது கொன்றுவிடுகிறது என்பதும் அரசனிடம் முறையிடப்பட்டது. உடனே அரசன் போதிசத்துவரை வருவித்து, "அமைச்சரே! யானையின் மனம் பேதலித்திருப்பதற்குக் காரணம் என்ன என்பதை அறிந்து வாருங்கள்" என்று சொன்னான்.

போதிசத்துவர் கட்டுத்துறைக்கு வந்து யானையைப் பார்த்தார். யானைக்கு உடம்பில் எத்தகைய பிணியும் இல்லை என்பதைத் தெரிந்துகொண்டார். யானை

யின் மனம் திடுமெனப் பேதலிக்கக் காரணம் என்னவாக இருக்கலாம் என்று எண்ணிப் பார்த்தார். யாராவது பேசியதைக் கேட்டுக்கொண்டு இருந்ததனால் யானையின் மனம் பேதலித்திருக்கலாம் என்ற முடிவுக்கு வந்தார். ஆகவே யானையைக் கவனித்துக்கொள்வோரைக் கூப்பிட்டு, "யாராவது யானைக்கட்டுத் துறையருகில் இரவுநேரத்தில் பேசிக்கொண்டிருந்தார்களா?" என்று கேட்டார்.

"ஆம் ஐயா! கொள்ளைக் கூட்டத்தார் வந்து பேசினார்கள்" என்று அவர்கள் தெரிவித்தார்கள்.

இதைக் கேட்டுக்கொண்டு போதிசத்துவர் அரசனிடம் திரும்பினார். "அரசே! யானையின் உடலில் எவ்வித நோயும் இல்லை. திருடர்கள் சிலர் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டபின் யானையின் மனம் பேதலித்துப்போயிருக்கிறது" என்று சொன்னார்.

"அப்படியானால் இப்போது நாம் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான் அரசன்.

"யானைக் கட்டுத்துறைக்கு அருகில் இருந்து நல்லவர்கள், அறிஞர்கள், பக்தர்கள் ஆகியோர் உரையாடட்டும். யானை திருந்திவிடும்" என்று போதி சத்துவர் கூறினார்.

"அதற்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்றான் அரசன்.

அதன்படி போதிசத்துவர் அறிஞர்களையும் பக்தர்களையும் நல்லவர் களையும் அனுப்பி, யானைக் கட்டுத்துறையருகில் அமர்ந்து பேசும்படி ஏற்பாடு செய்தார்.

அவர்கள் யானை மண்டபத்துக்கு அருகில் அமர்ந்துகொண்டு, "யாரை யும் துன்புறுத்தக் கூடாது; கொடுமையாக நடத்தக் கூடாது; கொல்லக் கூடாது. நல்லவர்கள் துன்பத்தைப் பொறுத்துக்கொள்ள வேண்டும். அன்போடும் இரக்கத் தோடும் அனைவரிடமும் நடக்க வேண்டும்" என்பன போன்ற நல்ல விஷயங் களையே வழக்கம் போல் தங்களுக்குள் உரையாடினார்கள்.

இவற்றைக் கேட்டதும் இவை தனக்குக் கூறும் அறிவுரை என யானை தீர்மானித்துக்கொண்டது. அது முதல் மீண்டும் நல்லபடியாக நடந்துகொள்ள லாயிற்று.

அரசன் போதிசத்துவரிடம், "யானை இப்போது நல்லபடியாக நடந்து கொள்கிறதா?" என்று கேட்டான்.

"ஆம், அரசர்பெருமானே! நல்லவர்களின் பேச்சைக் கேட்டுக் கேட்டு யானை திருந்திவிட்டது" என்று சொல்லிப் பின்வரும் பாடலை அவர் பாடினார்:—

"திருடர்களின் பேச்சை முதலில் கேட்ட அழகுச்செல்வி,
கொல்லவும் புண்படுத்தவும் பழகிப் போய்விட்டது.
பிறகு உயர்ந்தவர்களின் பேச்சைக் கேட்டுக் கேட்டு,
பெருந்தன்மை வாய்ந்த அந்த யானை திருந்திவிட்டது."

'விலங்குகளின் மன இயல்பை அறியும் திறன் இவருக்கு இருக்கிறதே!' என்று அதிசயித்த அரசன் போதிசத்துவருக்கு வெகுமதிகள் வழங்கிப் பாராட்டினான்.



# முருகப்பெருமானின் பெருமை

தி. வேங்கடகிருஷ்ணன்

பழந்தமிழ் நாட்டில் வாழ்ந்த மக்கள் வழிபட்டு வந்த கடவுளர்களுள் முருகனும் சிறப்பு மிக்க கடவுளாவர்.

இன்று கிடைத்துள்ள பழந்தமிழ் நூல்கள் அனைத்துக்கும் முற்பட்டதான தொல்காப்பியம், முருகப் பெருமானைக் குறிஞ்சி நிலத்துக்கு உரிய கடவுளாகக் கூறுகிறது. ''சேயோன் மேய மைவரை உலகமும்'' என்பது இதற்குச் சான்றாகும்.

தொல்காப்பியத்தை அடுத்துத் தோன்றிய தொகைநூலாகிய எட்டுத்தொகை நூலுள் பரிபாடலிலும், எட்டுப் பாடல்கள் முருகனுக்கு உரியனவாக உள்ளன. இதிலிருந்தும் முருகன் தமிழ் மக்களின் கடவுளாகப் பண்டைக் காலம் தொட்டு விளங்கி வருகிறான் என்பதை அறியலாம்.

நானிலங்களுள்ளும் குறிஞ்சி நிலத்தைச் சேர்ந்த மலையே முதன்முதலில் தோன்றியது என்பர் ஆன்றோர். ''கல் தோன்றி மண்தோன்றாக் காலத்தே, வாளொடு முன் தோன்றி மூத்த தமிழ்'' என்ற வரிகளிலிருந்து இதை அறியலாம். இப்படி முதல் நிலமாகிய குறிஞ்சிக்கு முருகன் தெய்வமாகத் திகழ்வது அவனது ஏற்றத்தை இயம்புகிறது.

முருகன் என்றால் அழகு என்று பொருள் படும். ஆகையால் முருகன் என்றால் அழகன் என்று ஆகும்.

முருகன் அழகாகவும் செந்நிறமாகவும் இருப்பதாகக் கருதப்படுவதனால்தான் அவனைச் செவ்வேள் என்று செப்புகிறார்கள். அழகுத் தெய்வமாகிய மன்மதனின் நிறம் கறுப்பு. எனவே அவன் கருவேள் ஆவான். ஆனால் செவ்வேளாகிய முருகனின் முன்னால் அவன் எம்மாத்திரம்!

முருகன் என்ற பெயரில் வேறு சிறப்பும் உள்ளது. இந்தச் சொல் தூய தமிழ்ச் சொல்லாகவும், தமிழ் நெடுங்கணக்கின் உயிர்மெய்யின் மூன்று இனங்களையும் கொண்டதாகவும் அமைந்துள்ளதைக் காணலாம். முதலெழுத்து மெல்லினமாகவும், அடுத்த எழுத்து இடையினமாகவும், மூன்றாவது எழுத்து வல்லினமாகவும், நான்காவது எழுத்து, தமிழுக்கே உரிய னன்னகரமாகவும் அமைந்துள்ள சிறப்பு அறிந்தறிந்து இன்புறற்பாலது.

முருகனின் தோற்றமே அவனுடைய பேராற்றலைப் புலப்படுத்துகிறது. சூரபன்மன், தாரகாசுரன் போன்ற அளவிலா ஆற்றல் பெற்ற அவுணர்களால், பிரமன் இந்திராதி தேவர்கள் அல்லற்பட்டுச் சிவபெருமானிடம் குறையிரந்து வேண்ட, அவர்களைக் காக்கும்பொருட்டுச் சிவபெருமான் தனது ஐந்து முகங்களாகிய ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோசாதம் என்பனவற்றுடன் அதோமுகம் என்ற ஆறாவது முகத்தையும் எடுத்துக்கொண்டு, அவற்றிலுள்ள நெற்றிக்கண்களிலிருந்து வெளிப்படுத்திய தீப்பொறிகளே முருகனாகத் திருவவதாரம் எடுத்தன. சிவபெருமானுடைய மூவிரு குணங்களே முருகன்.

நெருப்பு ஒளி வீசுவதற்கும், நெருங்கினோரை நிலைகுலையச் செய்வதற்கும் உரிய ஆற்றல் மிக்கது. அத்தகைய ஆற்றல் மிக்க குமரன், வெல்லற்கரிய சூரபன்மனை வென்று சூர்முதல் தடிந்த சுடர்மிகு வேலன் ஆனான். பிளக்க அரிய கிரௌஞ்ச மலையைத் தன் வேலால் பிளந்ததும், தான் ஒருவனாக நின்று, தானென்னும் அகந்தை கொண்ட

தாரகனுடி தானவக் கூட்டங்களைத் தடிந்ததும் முருகனது அளவிலா ஆற்றலுக்கு எடுத்துக்காட்டுக்களாகும்.

முருகனின் அழகை என்னென்றுரைப்பது! செந்நிறமும், அறுமுகமும், பன்னிரு தோளும், பளபளக்கும் வேலும் பக்தர்களுக்கு அருள்மாரி பொழியும் ஆறிரு கண்களும் அடியவர் உள்ளத்தை அடிமை கொள்ளும் அழகு வாய்ந்தன.

அவனுடைய அழகிலும் ஆற்றலிலும் ஈடுபட்டு அவனை மணந்துகொள்ள விரும்பி அமுதவல்லி, சுந்தரவல்லி என்ற பெண்கள், அவன் வளர்ந்த தடாகத்தில் தவம் செய்ததும், அவர்களுக்கு அருள் புரிந்து, அவர்களை முறையே இந்திரனிடமும் வேட்டுவ அரசனிடமும் வளருமாறு செய்து தெய்வயானை, வள்ளி என்று பெயர் கொண்ட அவர்களை மணந்து கொண்டதும் முருகனின் அழகையும் அருளுள்ளத்தையும் காட்டுவன.



முருகனின் வீரம் நலிவுற்றோரைக் காக்கவும், ஆணவமுடையோரை அடக்கவும் பயன்பட்டது. செருக்குற்ற பிரமனிடம், பிரணவத்தின் பொருளைச் சொல்லுமாறு உரைக்க, அவன் அறியாமல் விழிக்க, அவனுடைய ஆணவத்தை அழித்துச் சிறையிலிட்டான் ஆற்றல் மிக்க ஆறுமுகன். இத்தகைய வீரம் கொண்ட விமலன் பக்தர்களிடம் பரிந்து விளையாடலும் புரிந்தான்.

தமிழ் வளர்த்த ஔவையைத் தமிழில் வெல்லக் கருதி, ஆடு மேய்க்கும் சிறுவனாக நாவல்மரத்திலிருந்து, ''சுட்ட பழம் வேண்டுமா, சுடாத பழம் வேண்டுமா?'' என்று கேட்டு, மணலில் விழுந்த பழங்களை, மணல் அகல ஊதித் தின்ற ஔவையிடம், ''பாட்டி, பழம் சுடுகிறதா?'' என்று கேட்டு, ஆணவத்தை அகற்றிய அருட்செல்வன் அவன்.

பகைவனுக்கும் அருள்புரியும் பண்பை முருகனிடம் காண்கிறோம். அண்டம் சராசரங்களையும் ஆட்டித் துன்புறுத்திய சூரபன்மனை வென்றபோது, அவனிடம் கருணை காட்டி அவனை மயிலும் சேவலுமாய் ஆக்கித் தனக்குத் தொண்டு செய்து, அதனால் அவனுக்கு உலகெலாம் வணங்கத் தக்க உயர்பதம் அளித்தான் உமையொரு பாலன்.

அடியவர்களுக்கு அருள் புரியவே ஆறு படைவீடுகளில் அமர்ந்துள்ளான் ஆறுமுகன். திருப்பரங்குன்றம், திருச்செந்தூர் (திருச்சீரலைவாய்), பழநி (திருவாவினன்குடி), திருவேரகம் (சுவாமிமலை), பழமுதிர்சோலை, குன்றுதோறாடல் ஆகிய ஆறு படைவீடுகளின் பெருமையை அறியாதார் யார்? இவை தவிர, 'அடியார்களின் உள்ளத்திலும் எழுந்தருளி நித்தமும் அருள் புரிகிறான் அந்த நிமலன்.

அடியார்களைக் காக்க அவதரித்த அண்ணல் முருகப்பெருமான், தனது பன்னிரு கரங்களிலும் பன்னிரு உருத்திரர்களையுமே படையாகக் கொண்டுள்ளான் என்று கந்தபுராணம் கூறுகிறது. அவனது கைகளில் அங்குசம், குலிசம், கொடி, தண்டம், தாமரை, தோமரம், பகழி, மணி, மழு, வாள், வில் ஆகியவை அமைந்துள்ளதைக் கீழ்க்கண்ட கந்தபுராணப் பாடல் 'விளக்குகிறது—

வீறு கேதனம், வச்சிரம்,
அங்குசம், விசிகம்
மாறி லாதவேல் அபயமே,
வலமிடம் வரதம்
ஏறு பங்கயம், மணி, மழுத்
தண்டு வில் இசைந்த
ஆறி ரண்டுகை அறுமுகங் கொண்டு
வேள் அணிந்தான்.

(கேதனம்-கொடி; விசிகம்-அம்பு.)

முருகனுக்குக் கோடல், கடம்பம், குரவம், வெட்சி ஆகிய மலர்மாலைகள் உவப்பானவை. அவன் அடியார்களிடம் விரைவில் அருள்பாலிக்கும் தன்மையுடையவன். கலியுக வரதனாகிய அவன், பிறந்தது முதல் ஐந்தாண்டு வரை ஊமையாக இருந்த குமரகுருபரருக்கு அருள்சுரந்து

அவருடைய ஊமைத் தன்மையைப் போக்கி அவரை இறைக் கவியாக ஆக்கியது அனைவரும் அறிந்ததே.

இத்தகைய அருள்வள்ளலை இந்துக்கள் மட்டும் அல்லாமல் பிற மதத்தினரும் தொழுகிறார்கள் என்பதில் வியப்பில்லை. திருப்பெருந்துறைக் கோவில் மண்டபத்தி லுள்ள ஒரு தூணில் குதிரைச் சேவகன் வடிவில் முருகனின் உருவம் பொறிக்கப் பட்டுள்ளது. இதற்குப் பூசை நடக்கிறது என்றும், அந்த முருகன் உருவைக் குதிரை ராவுத்தர் என்று சொல்வர் என்றும் அறிகிறோம். மேலும், இந்த மண்டபத்தைக் குதிரை ராவுத்தர் மண்டபம் என்கிறார்கள். முஸ்லிம் சகோ தரர்கள் இவ்விடத்தில் மட்டும் வந்து தொழுகின்றனராம். இவ்வாறே பழநியி லும் முஸ்லிம்கள் முருகனைப் பின்புறமாக வந்து வணங்குகின்றனர்.

திருப்புகழ் பாடியுள்ள அருணகிரி நாதரும், ''தனிமயிலேறும் ராவுத்தனே'' எனப் பாடியுள்ளது நினைவு கொள்ளத் தக்கதாகும். நம் நாட்டில் மட்டு மின்றி, முருகன் வழிபாடு இலங்கை யிலும், சிங்கப்பூர், மலேசியா நாடுகளிலும் பரவியுள்ளது. கோலாலம்பூரை அடுத்த பத்து மலைக் குகை முருகன் கோவிலில் தைப் பூச விழாவின்போது சீனர்கள், மலேசியர்கள் போன்ற பலவேறு சமயத் தினரும் காவடி எடுக்கிறார்கள் என்றால் முருகனின் பெருமையை மொழியவும் வேண்டுமோ!

முருகனுடைய மனைவியரான தெய்வ யானையும் வள்ளியும் முறையே கிரியா சக்தியாகவும் இச்சா சக்தியாகவும் உள் ளனர். அவனது வேல் ஞானசக்தியாகத் திகழ்கிறது. அவனுடைய ஊர்தியாகிய மயில், பிரணவத்தின் வடிவமாகும். அவ னுடைய ஆறு முகங்களில் ஒன்று, சந்திர சூரியருக்கு ஒளி தருகிறது என்றும், மற்றொன்று யாராலும் அறிய வொண்ணாத நுட்பத்தை வெளிப்படுத்தி உபதேசிக்கிறது என்றும், பிறிதொன்று மறையவர் வேள்வி செய்யத் துணைபுரி கிறது என்றும், இன்னுமொன்று வள்ளி நாயகியுடன் நகையாடுகிறது என்றும், மற் றொன்று போர்க்களத்தில் வீரத்தைக் காட்டுகிறது என்றும் திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் பாடுகிறார். அருணகிரி நாதரோ, தமது திருப்புகழில்,



ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே,
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே,
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே,
குன்றுருவி வேல்வாங்கி நின்றமுக மொன்றே,
மாறுபடு சூரனை வதைத்தமுகம் ஒன்றே,
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே!

என்று பாடிவிட்டு, இறைவனிடத்தி லேயே ஆறுமுகம் ஆன பொருளை விளக்கு மாறு வேண்டுகிறார்—

ஆறுமுக மானபொருள் நீயருள வேண்டும்,
ஆதியருணசலம் அமர்ந்தபெரு மாளே!

இவ்வாறு நல்லருள் புரிந்து நல்லவர் களைக் காக்கும் முருகனைப் பற்றிப் பாடப்பட்டுள்ள 'கந்தஷஷ்டி கவசம்' மிக வும் பரவியுள்ளது. அதை நாள்தோறும் பாராயணம் செய்து பயனடைவோர் பலப் பலர்.

ஆதிசங்கரர் ஸ்தாபித்த ஆறு சமயங் களில் கௌமார மதம் என்பது, குமரனை முழு முதற் கடவுளாகக் கருதி வழிபாடு செய்யும் மதமாகும். முருகன் சிவ பெருமானின் தோன்றலாகவும், திருமா லின் மருமகனாகவும் அமைந்து, சைவம் வைணவம் ஆகிய இரண்டையும் இணைக் கும் புனிதக் கடவுளாக இலங்குகிறான். அவனை வழிபட்டு அவனுடைய பேரரு ளுக்குப் பாத்திரர்களாவோமாக!

# விவேக மொழிகள்



[ஸ்ரீ சாரதாதேவியார் அருளியது]

1. மனிதப் பிறவி துன்பங்கள் நிறைந்தது. இறைவன் பெயரை ஓதிக்கொண்டே அவற்றை எல்லாம் சகித்துக்கொள்ள வேண்டும்.

2. குழந்தாய்! கவலையுறாதே! இந்த உலகப் பந்தங்களெல்லாம் நிலையில்லாதனவே. இன்று அவையே சாரமும் பயனும் என்று தோன்றும். ஆனால், நாளைக்கு அவை மறைந்துவிடும். இறைவனுடன் உள்ள தொடர்பே உண்மையானது.

3. ஒருவன் இறைவனிடம் சரண் புகுந்தால், தவிர்க்க முடியாத விதியின் கட்டளைகளும் அகற்றப்படுகின்றன. இத்தகைய மனிதனது தலையெழுத்தை விதியே தனது கரங்களால் துடைத்துவிடுகிறது.

4. உங்கள் மனச்சுமையை ஸ்ரீராமகிருஷ்ணர் முன் இறக்கி வையுங்கள். கண்ணீருடன் உங்கள் துன்பங்களை அவரிடம் எடுத்துச் சொல்லுங்கள். உங்கள் கை நிறைய நீங்கள் விரும்பியவற்றை அவர் தருவதைக் காண்பீர்கள்.

5. கடவுள் ஒவ்வொருவருக்கும் சொந்தமானவர். அந்த ஒரே ஒரு தொடர்புதான் நிலையான தொடர்பாகும். இறைவனிடம் கொள்ளும் பக்தியின் முதிர்ச்சிக்கு ஏற்றவாறு ஒருவன் அவரை உணர்கிறான். அஞ்சற்க! பகவான் உன்னைப் பாதுகாத்துக்கொண்டே இருப்பதாக எப்போதும் நினைத்துக்கொண்டிரு.

6. ஒரு மனிதனுக்கு ஆசைகள் இருக்கும் வரை அவனது பிறவிச் சுழலுக்கு முடிவே இல்லை. அந்த ஆசைகளே அவனை ஒன்றன்பின் ஒன்றாகப் பல பிறவிகளை எடுக்கச் செய்கின்றன. ஒரு துண்டு கற்கண்டைச் சாப்பிட வேண்டும் என்ற விருப்பம் ஒருவனிடம் இருந்தாலும்கூட அவனுக்கு மறுபிறவி உண்டு.

7. பணக்காரன் இறைவனுக்கும் அவனது அடியார்களுக்கும் தன் பணத்தினால் தொண்டு புரிய வேண்டும்; ஏழையோ, இறைவனது நாமத்தைத் திரும்பத் திரும்ப ஜபிப்பதன் மூலம் இறைவனை வழிபட வேண்டும்.

8. நமக்கு முக்கியமானது அன்பே. அதன் மூலமே ஸ்ரீராமகிருஷ்ணரது ஆன்மிகக் குடும்பம் வளர்ந்து முன்னேறியிருக்கிறது.

9. எல்லாக் காரியங்களையும் இறைவனே செய்கிறான் என்பது உண்மையே.

**அன்னை ஸ்ரீ சாரதாதேவியின் 130-ஆவது ஜயந்தி 1982 டிசம்பர் 7-ஆம் நாள் செவ்வாய்க்கிழமை வழக்கம் போல் விமரிசையாகச் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் நடைபெறும்.**

ஆனால், அதை உணர்பவர் வெகு சிலரே. கர்வத்தினால் வெறிகொண்டே, மக்கள் இறைவனது துணையின்றி, தாங்களே எல்லாவற்றையும் செய்வதாகக் கருதுகிறார்கள், அவனை நம்பியிருப்பதில்லை. தன்னை நம்பியிருப்பவரை எல்லாத் துன்பங்களிலிருந்தும் இறைவன் காப்பாற்றுகிறான்.

*10.* குருதேவரைப் பற்றிய கனவுகள் யாவும் உண்மையானவையே. ஆனால், அவர் கனவு காண்பவரைத் தாம் கண்ட கனவைப் பற்றிப் பிறரிடமோ அல்லது தம்மிடமோ சொல்வதையும் தடுத்தார்.

*11.* இறைவன் எல்லாப் பிராணிகளிடமும் குடிகொண்டுள்ளான் என்பது உண்மையே. ஆனால், ஒவ்வொன்றும் அதன் அதன் பூர்வ சம்ஸ்காரம் கர்மம் ஆகியவற்றிற்கு ஏற்றபடி துன்பம் அனுபவிக்க வேண்டியிருக்கிறது. சூரியன் ஒன்றே. ஆனால், அதன் பிம்பங்கள் பலவேறு இடங்களிலும் பலவேறு பொருள்களிலும் வெவ்வேறாகின்றன.

*12.* குணத்தையோ குற்றத்தையோ எங்கு விவாதித்தாலும், அங்கே உடன் இருக்கும் ஒவ்வொருவருக்கும் அதில் சிறிதளவாவது பங்கு வந்து சேருகிறது.

*13.* உண்மையில் இறைவனிடம் உங்களுக்கு எவ்விதப் பற்றும் தோன்றாதிருந்தபோதிலும், அவனது பெயரை ஜபிப்பதனால் மட்டுமே, அவனைக் காண்பதில் நீங்கள் வெற்றியடைவீர்கள். நீங்களே நீரில் குதித்தாலும், அல்லது அதனுள் தள்ளப்பட்டாலும், உங்களுடைய ஆடை நனைந்து போகும் அல்லவா? உங்கள் மனம் இன்னும் பக்குவம் அடையவில்லையாதலால் தினந்தோறும் தியானம் செய்யுங்கள். தியானம் செய்யும் பழக்கம் மனதை ஒருமுகப்படுத்தும். அழியாப் பொருள்களையும் அழியும் பொருள்களையும் எப்போதும் பிரித்தறிக. இந்த உலகப் பொருள்களுள் ஒன்றின் மீது உங்கள் மனம் செல்லுவதைக் காணும்போதெல்லாம் உடனே அந்தப் பொருள்களின் நிலையற்ற தன்மையைச் சிந்தித்துக் கடவுள் மீது மனதை நிலைநிறுத்த முயற்சி செய்க.

### மகிழ்ச்சிக்கு வழி

உன்னுடைய நம்பிக்கைச் சக்தி முழுவதையும் கொண்டு நாமஸ்மரணம் செய்.

சமையலறையில் இருந்தாலும், தண்ணீர் இறைத்துக்கொண்டிருந்தாலும், குளித்துக் கொண்டிருந்தாலும், தெருவில் நடந்து கொண்டிருந்தாலும், உடலால் ஏதாவது வேலை செய்து கொண்டிருந்தாலும், எப்போதும் நாமத்தைச் சொல்வாயாக.

இடைவிடாமல் நாமத்தைச் சொல்லாத வரையில் உன்னால் சந்தோஷமின்மையைத் தவிர்க்க முடியாது.

—சுவாமி ராமதாசர்



*14.* எந்த மானுடப் பிறவியை நீ நேசித்தாலும், அதற்காக வருந்தத்தான் நேரிடும். எவன் இறைவன் ஒருவனிடம் மட்டுமே அன்பு செலுத்துகிறானோ, அவனே உண்மையில் பாக்கியசாலி. கடவுளை நேசிப்பதனால், எவ்விதத் துன்பமும் ஏற்படுவதில்லை.

*15.* சாவு எப்போது நம்மை அணுகும் என்பது நிச்சயமில்லை. ஆகவே ஒருவன் சந்தர்ப்பம் வாய்க்கும் போதெல்லாம் தூய எண்ணங்களைச் செயலாக்கிவிட வேண்டும். அதற்காக, ஒரு குறிப்பிட்ட காலத்தை எதிர்பார்த்திருக்கக் கூடாது. சாவுக்குக் காலப் பாகுபாடு கிடையாது.

*16.* செல்வம் எப்போதும் மனதைக் கறைப்படுத்துகிறது. நீங்கள் செல்வத்திற்கெல்லாம் அப்பாற்பட்டவர் என்றும், செல்வத்தின் மீது உங்களுக்கு எவ்விதப் பற்றும் ஏற்படாது என்றும் நினைக்கலாம். அதை நீங்கள் விரும்பியபோது விட்டுவிடலாம் என்று நினைக்க வேண்டாம். ஒரு சிறிய துளை வழியாக அந்தப் பற்று உங்கள் மனதில் புகுந்து, உங்களை அறியாமலே கொஞ்சம் கொஞ்சமாகக் கொன்றுவிடும்.




## எது சிறந்தது ?

நாடோடி

> மகாபாரதத்தில் இடம் பெற்றிருக்கும் கருத்தாழம் மிக்க நல்ல ஒரு கதை இது.

துரோணுசாரியாரிடம் பாண்டவரும் கௌரவரும் வில்வித்தை பயின்றுகொண்டிருந்த காலத்தில் ஒரு சமயம் அர்ஜுனன் கர்ணனைப் பார்த்து, ''கர்ணு, யுத்தம் உயர்ந்ததா, சமாதானம் உயர்ந்ததா?'' என்று கேட்டான்.

''சமாதானம்தான் உயர்ந்தது'' என்ருன் கர்ணன்.

''எப்படிச் சொல்கிருய்?'' என்ருன் அர்ஜுனன்.

அதற்குக் கர்ணன், ''நாளைக்கே யுத்தம் வருகிறது என்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது நான் உன்னைத் தாக்கும் தாக்குதலில் உனக்குத் துக்கம் உண்டாகும். நான் இளகிய இதயம் படைத்தவன். ஆதலால் உன் துக்கத்தைக் கண்டு எனக்கும் துக்கம் ஏற்படும். ஆகவே சமாதானம்தான் சிறந்தது'' என்ருன்.

இதற்கு அர்ஜுனன், ''இதோ பார், கர்ணு! நான் நம் இருவர் சம்பந்தமாக இந்தக் கேள்வியை உன்னிடம் கேட்கவில்லை. பொதுவாக எது உயர்ந்தது என்று கேட்டேன்'' என்ருன்.

''இதற்கு என்னுல் உடனே பதில் சொல்ல இயலாது'' என்ருன் கர்ணன்.

பிறகு அர்ஜுனன் துரோணுசாரியாரிடம் சென்று, ''யுத்தம் சிறந்ததா, சமாதானம் சிறந்ததா?'' என்று கேட்டான்.

துரோணர் சிரித்துக்கொண்டே, ''குழந்தாய், யுத்தம்தான் சிறந்தது!'' என்ருர்.

''ஏன்?'' என்று கேட்டான் அர்ஜுனன்.

துரோணர், ''இதோ பார், அர்ஜுனு! யுத்தத்தில் எதிரிகளைக் கொன்றே அல்லது அவர்களை வெற்றி கொண்டோ நமக்குச் செல்வமும் கீர்த்தியும் கிடைக்கின்றன. சமாதானத்தில் இதெல்லாம் கிடைக்காது'' என்ருர்.

பிறகு அர்ஜுனன் பீஷ்மரிடம் சென்று, ''யுத்தம் சிறந்ததா, சமாதானம் சிறந்ததா?'' என்று கேட்டான்.

பீஷ்மர், ''குழந்தாய் அர்ஜுனு! எந்தச் சமயத்திலும் சமாதானம்தான் சிறந்தது'' என்ருர்.

''எப்படி?'' என்று கேட்டான் அர்ஜுனன். பீஷ்மர் சிரித்துக்கொண்டே, ''யுத்தத்தில் பார்க்கப்போனுல் க்ஷத்திரியர்தாம் லாபமடைவார்கள். ஆனுல் சமாதானத்தில் உலகம் முழுவதும் லாபம் அடையும். அதனுல்தான் சமாதானம் உயர்ந்தது'' என்ருர்.

இந்தப் பதில் அர்ஜுனனுக்குத் திருப்தி அளித்ததாகத் தெரியவில்லை. இதைக் கண்ட பீஷ்மர், ''ஆமாம், இந்தக் கேள்வியை நீ ஏன் என்னைக் கேட்கிருய்?'' என்று கேட்டார்.

அர்ஜுனன், ''அதற்கு இதுதான் காரணம்: சமாதானம் இருக்கும் வரையில் வித்

தையில் என்னைவிடக் கர்ணன்தான் கெட்டிக்காரன் என்று எல்லோரும் நினைத்துக் கொள்வார்கள். ஆனால் யுத்தம் வந்தால் யார் கெட்டிக்காரன் என்பது தெரிய வரும்'' என்றான்.



இதைக் கேட்டுப் பீஷ்மர் அர்ஜுனனைப் பார்த்து, ''குழந்தாய் அர்ஜுனா! உலகில் எல்லாவற்றையும்விடச் சிறந்தது தர்மம் தான்; யுத்தமாக இருந்தாலும் சரி, சமாதானமாக இருந்தாலும் சரி. ஆகவே நீ கர்ணன்மீது கொண்டுள்ள கோபத்தைத் துறந்துவிடு. உலகம் முழுவதும் உனக்கு உறவினர் மாதிரி. உலகில் ஒவ்வொருவரும் மற்றவர் மீது அன்பு காட்ட வேண்டும். அப்படிச் செய்தால்தான் உலக மக்களுக்கு நன்மை உண்டாகும். ஆகவே எல்லாரிடமும் அன்பு காட்டக் கற்றுக்கொள்'' என்று சொன்னார்.

இதைச் சொன்னபொழுது தாத்தா பீஷ்மாசாரியாரின் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் கீழே விழுந்தது.

கொஞ்ச காலம் கழித்து வியாஸ மகாமுனிவர் அஸ்தினாபுரம் வந்து சேர்ந்தார். அவரைப் பார்த்து அர்ஜுனன், ''முனிவரே! உலகில் எது சிறந்தது, யுத்தமா, சமாதானமா?'' என்று கேட்டான்.

வியாஸ முனிவர் சற்று நேரம் யோசனை செய்தார். பிறகு, ''உண்மையைச் சொல்ல வேண்டுமானால் இரண்டும் உயர்ந்தவை; இரண்டும் தாழ்ந்தவை. நாம் இவற்றை எந்தக் காரணத்திற்காக விரும்புகிறோமோ அதைப் பொறுத்தே அதன் உயர்வும் தாழ்வும் அமையும்'' என்று சொன்னார்.

வியாஸரின் இந்தப் பதில் அர்ஜுனனுக்குப் புரியவில்லை.

பல வருஷங்களுக்குப் பிறகு பாண்டவர்களின் அஞ்ஞாதவாசம் முடிவடையும் தருணத்தில் இவர்களைப் பார்ப்பதற்காகக் கிருஷ்ணன் அங்கு வந்து சேர்ந்தான். அவனைப் பார்த்து அர்ஜுனன், ''எனக்கு உள்ள ஒரு சந்தேகத்தை நீங்கள் விளக்க வேண்டும். யுத்தம் சிறந்ததா, சமாதானம் சிறந்ததா?'' என்று கேட்டான்.

கிருஷ்ணன், ''அர்ஜுனா! இந்தச் சமயத்தில் சமாதானமே சிறந்தது. ஏனென்றால் இப்பொழுது யுத்தம் நடத்தினால் நமக்குப் புகழ் கிடைக்காது. ஏனென்றால் மத்தியஸ்தம் செய்து வைப்பதற்காக நான் இப்பொழுது அஸ்தினாபுரம் சென்றுகொண்டிருக்கிறேன். ஆனால் தக்க சமயம் வரும்பொழுது யுத்தமும் சமாதானத்தைப் போலவே சிறந்து விளங்கும்'' என்றான்.

இதைக் கேட்ட பிறகுதான் வியாஸர் சொன்ன பதிலின் கருத்து அர்ஜுனனுக்கு விளங்கியது.

## செய்திகள்

*சேலம், ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் நவம்பர் 7-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை ஒரு நாள் அந்தர்யோகம் நடைபெற்றது. சுவாமி விஞ்ஞானந்தர், சுவாமி கமலாத்மானந்தர் ஆகியோர் உரையாற்றினர்.

*மேற்கு வங்காளம் மால்தா மாவட்டத்தில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் 513 கிராமங்களில் நடத்தி வந்த நிவாரணப் பணிகள் முடிவடைந்தன. இந்த நிவாரணப் பணியின் மூலம் 35,399 குடும்பத்தினர் பயனடைந்தனர். 481.4 டன் அரிசி உட்பட மளிகைச் சாமான்கள் விநியோகிக்கப்பட்டன.

*உத்தரப் பிரதேச மாநிலத்தில் அலகாபாத் ஸ்ரீராமகிருஷ்ண மடம், வெள்ளத்தில் பாதிக்கப்பட்ட பகுதிகளில் நிவாரண வேலைகளை மேற்கொண்டது. அரிசி பருப்புப் போன்றவை விநியோகிக்கப்பட்டன.

*சிராபுஞ்சி ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் கிளை புதிய மருத்துவ மனை ஒன்றைக் துவக்கியது. கௌஹாட்டி, மிஷன் கிளை சார்பாக நடமாடும் மருத்துவ வேன் ஒன்று புதிதாகச் செயற்படத் துவங்கி யுள்ளது.

# கடவுளைக் காட்டும் பாதைகள்

சுவாமி விஞ்ஞானந்தர்

ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரத்தில் இருந்தபோது அங்கே ஒரு தோட்டி வாழ்ந்து வந்தான். பெயர் ரஸிக்; படிப்பறிவோ, ஆஸ்திகம் ஆசாரம் பற்றிய எவ்வித ஞானமோ அறவே இல்லாதவன். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அவனுக்குஎல்லையற்ற பக்தியும், அவரே கடவுள் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையும் இருந்தன.



ஒரு நாள் நடுப்பகல் நேரம். கோயிலில் நடமாட்டம் இல்லை. எங்கும் அமைதி. ஸ்ரீ ராமகிருஷ்ணர் கோயிலின் ஒரு பகுதியான பஞ்சவடி என்னும் இடத்திலிருந்து தனியாக வந்துகொண்டிருக்கிறார். இந்தத் தோட்டி அங்கும் இங்கும் பார்க்கிறான்; யாரும் இல்லை. ஓடிப்போய் அவர் கால்களில் விழ்ந்து இரண்டு கால்களையும் பற்றிக்கொள்கிறான். ''நீங்கள் வேறு யாருமில்லை, கடவுளேதான். நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்'' என்று மன்றாடுகிறான். 'இந்த உலகம் நரகம்; அதிலிருந்து நான் தப்ப வேண்டும்' என்ற துடிப்பு அவனிடம் இருந்தது.

திடீரென்று தெய்விகப் பரவசத்தில் மூழ்கிய ஸ்ரீராமகிருஷ்ணர் அவனிடம், ''எழுந்திரு! எழுந்திரு! நீ காப்பாற்றப்படுவாய். உன் மரணகாலத்தில் நீ கடவுளைக் காண்பாய்'' என்று கூறினார்.

அவன் வயதானவன். கொஞ்ச காலம் நோயுற்று மரணப் படுக்கையில் வீழ்ந்தான்.

அவனது உயிர் பிரியும் வேளையில் பிள்ளைகள், உற்றார் உறவினர் அனைவரும் அவனைச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். வெகு நேரமாக மயக்கத்தோடு எதுவும் பேசாதிருந்த அவன் திடீரென்று, ''ஆ! எவ்வளவு வெளிச்சம்! எவ்வளவு வெளிச்சம்! அதன் நடுவே, ஓ! நீங்களா? ஸ்ரீராமகிருஷ்ணா, வந்து விட்டீர்களா?'' என்று ஆனந்தத்தோடு கத்தினான். பிறகு உயிர் பிரிந்தது.

அவன் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் தன்னைக் காப்பாற்றும்படி மன்றாடினான். கடவுளான அவர் எப்படி அவனைக் காப்பாற்றாமல் இருக்க முடியும்? இதுதான் சரணாகதி அல்லது கடவுளிடம் நம்மை ஒப்புவித்தல்.

ராமாயணத்தில் ஒரு காட்சி—வீபீஷணன் தன் மனைவி மக்கள் அனைவரையும் இலங்கையில் விட்டுவிட்டு, ராமரிடம் வந்து சரணடைந்தான். இதைக் கண்ட சுக்கிரீவன் முதலானவர்கள், ''இவன் ராவணன் தம்பி. சூழ்ச்சி செய்வதற்காக இங்கு வந்து சரணடைகிறான். இவனை ஏற்றுக்கொள்ளக் கூடாது'' என்று கூறினார்கள். ஆனால் ராமர் அவர்கள் பேச்சை ஏற்றுக்கொள்ளவில்லை. ''சரணடைபவர் யாராக இருந்தாலும், அது ராவணனாகவே இருந்தாலும் அவனையும் காப்பது என் தர்மம்'' என்று கூறினார்.

ராமாயணத்தில் ராமர் வீபிஷணன் மூலமாகவும், கீதையில் கிருஷ்ணர் அர்ஜுனன் மூலமாகவும் இந்தச் சரணாகதி மார்க்கத்தை உலகிற்கு அறிவுறுத்தியிருக்கிறார்கள்.

**சரணுகதி மார்க்கம் தாழ்வானதா ?**

கடவுளிடம் மனிதனை அழைத்துச் செல்லும் எந்த மார்க்கமும் தாழ்ந்ததோ மோசமானதோ அல்ல. சரணுகதி மார்க்கம் வலுவில்லாதவர்களுக்கும், பாவம் செய்பவர்களுக்கும், ஞானம் இல்லாதவர்களுக்கும், பக்தி இல்லாதவர்களுக்கும் உரியது என்பதனுல் அது கீழான மார்க்கமாகிவிடாது. மற்ற மார்க்கங்களில் கடவுளை அடைய முற்படுகிறவர்களிடம் ஞானம், பக்தி, கர்மம், தியானம், மனவலிமை முதலான தகுதிகள் இருப்பது போல், சரணுகதி மார்க்கத்தில் ஈடுபடுபவர்களுக்கு ஏதும் இல்லையே என்று கேட்கலாம். இவை இல்லாமல் இருப்பது தான் சரணுகதி மார்க்கத்திற்கான தகுதியாகும். இந்த வழியில் செல்பவர்களுக்கு உள்ள தகுதிகள் எல்லாம் கடவுளிடம் அவர்களுக்கு இருக்கிற அசைக்க முடியாத நம்பிக்கை ஒன்றே ஆகும். ராமானுஜர் இந்தச் சரணுகதி மார்க்கத்திற்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்திருக்கிருர்.

சரணுகதி மார்க்கம் ஐந்து உறுப்புக்களால் அமைந்தது. இந்த ஐந்து அங்கங்களும் சேர்ந்தே சரணுகதி என்னும் அமைப்பை முழுமை செய்கின்றன. அவற்றில் முதலாவது—**1. ஆனுகூல்யஸ்ய ஸங்கல்பம்**—கடவுளின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகவே உலகில் வாழ்வது. அதாவது வாழ்வில் எல்லாவற்றையும் கடவுளிடம் ஒப்படைத்துவிட்டு அவருடைய விருப்பமே தன் வாழ்க்கை என்று வாழ்வது. உலகில் எல்லாமே கடவுள்; ஆண் பெண் மரம் செடி கொடிகள் அனைத்தும் அவரே என்று வாழ்வது இந்த அங்கமாகும்.

**2. ப்ராதிகூல்ய வர்ஜனம்**—கடவுளின் விருப்பத்திற்கு மாருக நடப்பதில்லை என்று உறுதி கொள்வது. 'கடவுளே எனக்கு எல்லாம். என்னைக் காப்பாற்றுபவர் அவர் ஒருவரே. அவருடைய விருப்பத்திற்கு மாருக நான் எதையும் செய்ய மாட்டேன். அவருக்குச் சேவை செய்வதே என் லட்சியம்' என்று வாழ்வது. இதுதான் இரண்டாவது அங்கம்.

**3. கார்ப்பண்யம்**—பணிவுடைமை. சரணுகதி மார்க்கத்தில் செல்பவன் மிகுந்த பணிவுடையவனுக இருக்க வேண்டும். சைதன்யதேவர், ''அவன் புல்லைப் போன்று மிகப் பணிவுடையவனுகவும், மரத்தைப் போன்று பொறுமையோடும், பிறரிடம் எதையும் எதிர்பார்க்காதவனுகவும் இருக்க வேண்டும்'' என்று கூறுகிருர். புல் எல்லார் காலடியிலும் மிதிபடுகிறது. யாரிடமும் அது மரியாதையை எதிர்பார்ப்பதில்லை. மரம் வெயிலில் நிற்கிறது. தன்னிடம் வருபவர்களுக்கும், தன்னையே வெட்டுபவர்களுக்கும் அது நிழலையும் கனியையும் தந்து காக்கிறது. பிறரிடமிருந்து எதனையும் அது எதிர்பார்ப்பதில்லை. இது போலவே சரணுகதியடைந்த பக்தர்கள் இருக்க வேண்டும்.



**4. மகாவிசுவாசம்**—அளவற்ற விசுவாசத்தை—நம்பிக்கையைக் கடவுளிடம் கொண்டிருப்பது. இத்தகைய பக்தனைப் பற்றிக் கூறும்போது, அவன் கடவுளிடம், 'பகவானே! நான் மூன்று உலகங்களிலும் தேடியலைந்தேன், இறுதியில், நீ ஒருவனே என்னைக் காப்பாற்றக் கூடியவன் என்பதை அறிந்தேன். அது போலவே நீ மூன்று உலகங்களில் தேடினுலும் என்னைத் தவிர உன்னுல் காப்பாற்றப்படக்கூடியவரும் யாரும் இல்லை. ஏனென்ருல் என்னைப் போல் பாவியும் இல்லை, உன்னைப் போல் காப்பாற்றும் கருணையாளனும் இல்லை' என்று கூறுவதாக மகான் ஒருவர் கூறியுள்ளார்.

**5. கோப்த்ருப்த்வ வரணம்**—கடவுளிடம் நம்மைக் காப்பாற்றும்படி வேண்டுவது. இது சரணுகதி தத்துவத்தில் இறுதியாக வருவது. கடவுள் நம்மைக் காப்பாற்றத் தயாராக இருக்கிருர். ஆனுல் அவர் நம்மைக் காப்பாற்றுவதற்கான வேண்டுகோள் நம்மிடமிருந்து செல்ல வேண்டும். கடவுளின் கருணையைக் கேட்டு அவரை நாம் அழைக்கவேண்டும், அழவேண்டும், துடிக்க வேண்டும். அதன் பிறகே கடவுள் தம் கருணையைத் தந்து காப்பாற்றுவார். *

# ஆன்மிக வினா-விடை!

சுவாமி கமலாத்மானந்தர்

**கேள்வி: முகுந்தன் என்ற விஷ்ணுவின் பெயருக்கு ஒரு கிறிஸ்தவர் ஆபாசமாகப் பொருள் கூறினார். உண்மையில் முகுந்தன் என்பதற்கு என்ன அர்த்தம்?**

**பதில்:** 'மு' என்பதற்கு முக்தியை வழங்குபவன் என்பது பொருள். 'கு' என்பதற்கு இந்த உலகத்தைச் சேர்ந்த இன்பங்களை அருளுபவன் என்பது பொருள்.

எனவே இம்மை, மறுமை எனப்பெறும் பர அபர ஞானங்களை வழங்குபவன் என்பதே முகுந்தன் என்ற திருநாமத்திற்கு உரிய சரியான பொருளாகும்.

லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 838-ஆவது திருநாமம் 'முகுந்தாயை நம:' என்று அமைந்துள்ளது. அந்த நாமத்திற்கு, ''முக்தி அளிப்பவள், முகுந்தன் வடிவத்தில் இருப்பவள்—முக்திம் ததாதீதி முகுந்தா'' என்று உரை தரப்பட்டிருக்கிறது.

> ஆன்மிக வினாவிடைப் பகுதிக்கு உரிய கேள்விகளை எழுதி அனுப்புங்கள். ஒருவரே எத்தனை கேள்விகள் வேண்டுமானாலும் எழுதி அனுப்பலாம்.
>
> இந்தப் பகுதிக்குப் பலரும் கேள்வி எழுதி அனுப்பியுள்ளார்கள். அவற்றில் பத்திரிகையின் தரத்திற்கு ஏற்புடைய கேள்விகள் மட்டுமே பிரசுரிக்கப்பெறும்.

**கேள்வி: அஞ்ஞானத்தின் தன்மை எத்தகையது?**

**பதில்:** அஞ்ஞானம் என்ற சொல்லுக்கு அறியாமை என்பது பொருள். அது எண்ணற்ற வடிவங்களை எடுக்க வல்லது. எனவே அதன் தன்மை இன்னதுதான் என்று திட்டவட்டமாகச் சொல்லி முடித்துவிட முடியாது. தங்கள் கேள்விக்கு வினா விடைப் பகுதியில் சுருக்கமாகத்தான் பதில் தர இயலும்.

ஆன்றோர் பலரும் அஞ்ஞானம் என்பதற்கு வெவ்வேறு வகையான விளக்கங்களைத் தந்துள்ளனர். அவர்கள் தந்த எல்லா விளக்கங்களும் பொருத்தமாகவே உள்ளன.

ஞானம்-அஞ்ஞானம் குறித்து ஸ்ரீராமகிருஷ்ணர் எவ்வளவோ சொல்லியிருக்கிறார். அவற்றில் சில வருமாறு—

''மனதைப் பரிசுத்தமாக்கும் ஞானம் தான் உண்மையான ஞானம்; மற்றவையெல்லாம் அஞ்ஞானம். கடவுளை அறிந்து கொள்ளுவது ஞானம்; மற்றவையெல்லாம் அஞ்ஞானம். ஒன்றாகக் காண்பது ஞானம். பலவாகக் காண்பது அஞ்ஞானம். 'யான்' 'எனது' என்பது அஞ்ஞானம்; 'நீ' 'உனது' என்று இறைவனைக் குறித்து உணர்வது ஞானம்'' என்று ஸ்ரீராமகிருஷ்ண பகவான் குறிப்பிட்டிருக்கிறார்.

''உடல் முதலிய தொகுதிகளை, 'தான்' அல்லது 'ஆத்மா' எனக் கொள்வது அஞ்ஞானம்'' என்பது ஸ்ரீசங்கரரின் வாக்கு.

அறியாமையைப் பொதுவாக நான்காகப் பிரிக்கலாம். அவை—1. அநுதயம், 2. ஸம்சயம், 3. விபர்யயம், 4. விஸ்மிருதி என்பவை ஆகும்.

அநுதயம்—சிறிதுகூடத் தெரிந்து கொள்ளாமல் இருப்பது, அறவே அறியாத நிலை. நூற்றுக்கு நூறு சதவீதம் அதாவது முழு அளவில் அறிந்துகொள்ளாமலே இருத்தல்.

ஸம்சயம்—இதுவா அதுவா என்று திட்டவட்டமாகத் தெரியாமல் இருப்பது, சந்தேகப்படுவது.

விபர்யயம்—இல்லவே இல்லாத ஒன்றை இருப்பதாகத் தவறாகக் கருதுவது. ஒன்றை அதற்கு மாறானதாக நினைக்கும் விபரீத உணர்வு.

விஸ்மிருதி—நினைவில் இல்லாமல் மறந்து போய்விடுவது.

**கேள்வி: கன்னிப் பெண்கள் நீராடச் செல்வதாகவும், நல்ல கணவன்மார் வாய்க்க வேண்டும் என்று பிரார்த்திப்பதாகவும் திருவெம்பாவைப் பாடல்கள் அமைந்துள்ளன. இந்தக் கருத்தை அப்படியே எடுத்துக் கொள்வதா? அல்லது உட்பொருளாக வேறு தத்துவம் இருக்கிறதா?**

**பதில்:** திருவெம்பாவை ஒரு தத்துவக் களஞ்சியம். அதற்கு விஷயம் தெரிந்த பெரியோரை அணுகினல் எவ்வளவோ விளக்கம் சொல்வார்கள். தங்கள் கேள்விக்குச் சுருக்கமான பதிலாகத்தான் இந்த இதழில் 'திருவெம்பாவை' என்ற தலைப்பில் ஒரு கட்டுரையை வெளியிட்டிருக்கிறேன். அதில் விளக்கம் காண்க.

**கேள்வி: சில கோவில்களில் சுவாமிக்குப் பூஜை செய்யும்போது திரையைத் தொங்க விடுகிருர்கள். அதற்கு என்ன காரணம்? நாமும் பூஜை செய்யும்போது திரையிட்டு, அல்லது கதவை மூடிவிட்டுப் பூஜை செய்ய வேண்டுமா?**

**பதில்:** பூஜை செய்யும்போது திரையிட மாட்டார்கள்; சுவாமிக்கு நைவேத்தியம் ஆகும்போதுதான் திரையிடுவார்கள்.

நாத்திகன், குஷ்டரோகி, பைத்தியக்காரன், தீயொழுக்கமுடையவன், சாஸ்திரங்களை அவமதித்துப் பேசுபவன், ஏமாற்றுக்காரன், மலடி, உடம்பு முழுவதும் எண்ணெய் பூசிக்கொண்டு நிற்பவன் ஆகியோர் பார்க்கும்படி பகவானுக்கு நிவேதனம் செய்யப்படுமானுல் அந்தப் பூஜை தனக்கு உரிய பலனைத் தராது என்று சொல்வார்கள்.

மேற்கூறியவர்களை மட்டும் நிவேதனத்தின்போது 'வராதே' என்று சொன்னுல், அவர்களில் பலரும் தகராறு செய்து குழப்பத்தைத்தான் ஏற்படுத்துவார்கள். அல்லது மனம் வருந்துவார்கள். எனவே அனைவருக்கும் பொதுவாகவே திரையிடும் வழக்கம் வந்திருக்கக்கூடும்.

நைவேத்தியம் செய்யப்படும்போது திரை தொங்குவதைத்தான், பூஜை செய்யும்போது என்று தாங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன்.

நிவேதனங்களைப் பார்க்கும்போது கண் பட்டுவிடும், சிலருக்கு நாவில் நீர் ஊறும் என்பதற்காகவும் திரையிடும் வழக்கம் வந்திருக்கலாம்.

வைதிகரான சிலர் தாங்கள் உணவருந்தும்போதே பிறர் பார்க்க அனுமதிக்க மாட்டார்கள். அத்தகையவர் தங்கள் தெய்வத்திற்குப் படையலிடுவதைப் பிறர் பார்க்க அனுமதிப்பார்கள் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

அபிஷேகம் செய்யும்போதும், அலங்காரம் செய்யும்போதும் சில கோவில்களில் திரையிடுகிருர்கள். பல கோவில்களில் அவ்விதம் இல்லை.

காசி விச்வநாதர் கோவிலில் பூஜை, அபிஷேகம், அலங்காரம், நிவேதனம் ஆகிய எந்த நேரத்திலுமே திரையிடுவதில்லை.

சுவாமி விக்கிரகத்தையும் படத்தையும் வெறும் விக்கிரகமாகவோ படமாகவோ கருதாமல் சாட்சாத் பகவானுகவே பக்தன் கருதுகிருன். அத்தகைய பக்தனுக்கு அந்த அர்ச்சாமூர்த்தி சின்மயமாகத் திகழ்கிறது.

ஆழ்ந்த பக்தியுடன் பூஜை செய்யும் பக்தன், பகவான் அங்கு உயிர்கொண்டு வீற்றிருப்பதாகவே கருதிப் பூஜையும் நிவேதனமும் செய்கிருன். அதே மன நிலையில் உள்ளவர்கள் உடன் இருக்கும் போது திரையைத் தொங்கவிடுவது, கதவை மூடுவது ஆகியவற்றைப் பின்பற்றத்தான் வேண்டும் என்ற அவசியம் இல்லை.

பக்தி சிரத்தையுடன் பக்தன் செய்வதைப் புரிந்துகொள்ளும் மனப்பக்குவம் பெருமல் கேலியாகப் பார்க்கவும் பேசவும் கூடியவர்கள், பிற சம்பிரதாயத்தினர் ஆகியோர் எதிரில் திரையிடுவதும் சரியானதே.

உதாரணமாக, ஹிந்து நிவேதனம் செய்வதை, உள்ளம் போல் உடையும் கறுத்த கறுப்புச் சட்டைக்காரரும் இஸ்லாமியரும் கிறிஸ்தவரும் பார்க்க அனுமதிக்க வேண்டிய அவசியம்தான் என்ன?

சுவாமியைத் தரிசிக்க விரும்புகிறவர்கள் எந்த நேரத்திலும் அவரைத் தரிசிக்க ஒப்புக்கொள்வார்கள்; நிவேதனத்தின் போது மட்டுமே பார்ப்பேன் என்று வீம்பு செய்ய மாட்டார்கள்.

**கேள்வி: தன்மாத்திரை என்பது என்ன?**

**பதில்:** தன்மாத்திரை என்பது ஒரு சூட்சும நிலை.

ஒவ்வொரு தத்துவத்திற்கும் ஒருவிதத் தன்மாத்திரை உண்டு. தத்துவத்திற்கு இருக்க வேண்டிய நிறை, உருவம், பருமன், நாதம், சக்தி இவற்றை விளக்கிக் காட்டும் அளவு பதார்த்தம், குணம் இவை அனைத்தையும் ஒரு முத்திரையாக அமைத்துத் 'தன்மாத்திரை' என்று பெயரிடப்பட்டுள்ளது.

உதாரணமாக, நமது ஸ்தூல சரீரம் இருக்கிறது. இது சூட்சும சரீரத்திலிருந்து உண்டாகியிருக்கிறது. பிறகு ஸ்தூல சரீரம் அழியும்போது மீண்டும் அது தன் சூட்சும சரீரத்திற்கே சென்றுவிடுகிறது.

அது போன்றே பிருத்வி (மண்) இருக்கிறது. அது ஸ்தூல வடிவம். பிருத்வி அழியும்போது அது தன் சூட்சும நிலையாகிய தன்மாத்திரை என்ற நிலைக்குச் சென்றுவிடுகிறது.

மனித உடல், பஞ்சபூதங்களின் சேர்க்கையாக அமைந்தது. மனிதன் இறந்து போகும்போது அந்த உடலில் இருந்த பஞ்சபூதங்களும் தத்தம் சூட்சும நிலையாகிய தன்மாத்திரை நிலைக்குச் சென்றுவிடுகின்றன.

சர்க்கரை என்ற ஸ்தூலப் பொருளுக்கு இனிப்பு என்ற சூட்சும நிலையைத் தன்மாத்திரை என்று சொல்லலாம்.

எனவே ஒவ்வொரு ஸ்தூலப் பொருளுக்கும் ஒவ்வொரு சூட்சும நிலை உண்டு. அந்தச் சூட்சும நிலையே தன்மாத்திரை எனப்பெறுகிறது.

---

**ஒரு நீதிக் கதை:**

## பகவானின் பாதுகைகள்

'நாடோடி'

முன்னொரு சமயம், வைகுண்டத்தில், ஸ்ரீமந்நாராயணன் பள்ளிகொண்டிருந்தார். அப்பொழுது அவர் பக்கத்தில் இருந்த அவருடைய பாதுகைகளைப் பார்த்து, அவருடைய வெண்கொற்றக்குடையும் சாமரமும் பேசத் தொடங்கின.

''பாதுகையாரே! நாராயணனே தூங்கிக்கொண்டிருக்கிறார். நாம் மூவரும் சற்று உலாவிவிட்டு வரலாம், வாரும்'' என்றன குடையும் சாமரமும்.

அதற்குப் பாதுகை, ''எந்த நிமிஷத்தில் பக்தன் கூப்பிடுவானோ, அந்த நிமிஷமே பகவான் விழித்துக்கொண்டு ஓட ஆரம்பித்துவிடுவார். அப்பொழுது முதல்முதலில் என்னைத்தான் தேடுவார். ஆகவே நான் வர முடியாது'' என்று சொல்லிற்று.

இதைக் கேட்டு வெண்கொற்றக்குடையும் சாமரமும் பாதுகையைப் பார்த்துச் சிரித்தன.

''இப்படி வேலை செய்துகொண்டிருந்தால், வேலை செய்துகொண்டே இருக்க வேண்டியதுதான். நீர் எப்படியாவது போம். நாங்கள் இருவரும் குஷியாக உலாவிவிட்டு வருகிறோம்'' என்று சொல்லி, அவை இரண்டும் வெளியே போய்விட்டன.

இதை ஸ்ரீமந்நாராயணன் கேட்டுக்கொண்டேதான் இருந்தார். இந்த வெண்கொற்றக் குடைக்கும், சாமரத்திற்கும் பாடம் கற்பிக்க வேண்டும் என்று நினைத்தார்.



அதனால்தான் பகவான் ராமனாக அவதாரம் செய்தபோது அவருடைய பாதுகைகள் அவருக்குப் பதில் பதினான்கு வருஷகாலம் சிம்மாசனத்தில் இருந்து அரசு புரியும் பாக்கியத்தைப் பெற்றன. அந்தப் பாதுகைகளுக்கும் அந்தப் பதினான்கு வருஷகாலமும், ஒரு நிமிஷங்கூட வெளியே போக முடியாமல், அந்த வெண்கொற்றக் குடையும் சாமரமும் பக்கத்திலேயே இருந்து தொண்டுபுரிய வேண்டி வந்தது!

# கண்ணனும் கர்ணனும்

சத்தியகாமன்



கொடைவள்ளல் என்று சொன்னுல் அது கர்ணனுக்கே முற்றிலும் பொருந்தும். உலகில் எத்தனை எத்தனையோ கொடைவள்ளல்கள் இருந் திருக்கிருர்கள். எனினும் அவர்கள் அனைவரையும் விடக் கர்ணனே நம் உள்ளத்தில் நிலைத்து நிற்கிருன்.

கர்ணனின் பெருமையை அர்ஜுனன் சரியாக உணர்ந்துகொள்ளவில்லை. எனவே கண்ணன் ஒரு லீலை செய்து அர்ஜுனனுக்குப் படிப்பினை தர நினைத்தார்.

அதற்கிணங்க, கண்ணபிரான் ஓர் அந்தணன் வடிவம் தாங்கிக் கர்ணனிடம் சென்ருர். அப்போது கர்ணன் தன் தலைக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தான். அவனது இடக் கையில் எண்ணெய் நிரம்பிய பொற்கிண்ணம் இருந்தது. அந்தக் கிண ணத்திலிருந்து கர்ணன் வலக் கையினுல் எண்ணெயை எடுத்துத் தலைக்குத் தேய்த்துக்கொண்டிருந்தான்.

கர்ணனிடம் சென்ற அந்தணர், ''தங்கள் கையிலிருக்கும் பொற்கிண்ணத்தை எனக்குத் தான மாகத் தர வேண்டும்'' என்று கேட்டார்.

அவ்விதம் அந்தணர் கேட்ட மறுவிநாடியே அவர் எடுத்துக் கொள்வதற்காகத் தன் இடக் கையிலிருந்த பொற்கிண்ணத்தை அப்படியே அவர் எதிரில் நீட்டினுன் கர்ணன்.

அதைக் கண்டு கோபித்த அந்தணர், ''எண்ணெயுடன் இருக்கும் கைகளைக் கழுவிய பிறகு பொற்கிண்ணத்தைத் தாங்கள் எனக்குத் தருவதுதான் மரியாதை. இப்படி இடக் கையால் தாங்கள் தருவது என்னை அவமதிப்பது போல் இருக்கிறது. கையைக் கழுவிய பிறகு வலக் கையால் இந்தப் பொற்கிண்ணத்தைத் தாங்கள் எனக்குக் கொடுத்திருக்கலாமே!'' என்ருர்.

அதற்குக் கர்ணன், ''வலக் கையைக் கழுவுவதற்குள் என் குரங்கு மனம் மாறிவிட்டால் என்ன செய்வது? அதற்காகத்தான் தாங்கள் கேட்டவுடனே இடக் கை என்றும் பாராமல் பொற்கிண்ணத்தைத் தங்களுக்குத் தானம் அளித்தேன்'' என்று விளக்கம் கூறினுன்.

கர்ணனின் பதில் கண்ணனுக்கு மகிழ்ச்சி தந்தது. அவர் அந்தணர் வடிவம் நீங்கித் தம் சுய வடிவத்தில் கர்ணனை ஆசீர்வதித்தார்.

நல்ல காரியங்களைத் தாமதம் செய்யாமல் உடனுக்குடன் செய்ய வேண்டும். கெட்ட காரியம் என்று மனச்சாட்சி கூறுவதை அப்போதைக்கு அப்போதே செய்யாமல் எவ்வளவு காலதாமதம் செய்ய இயலுமோ அவ்வளவு காலதாமதம் செய்ய வேண்டும்.

இவ்விதம் கெட்ட காரியங்களை ஒத்திப்போடுவதனால் அதைச் செய்யாமலேயே போகும் வாய்ப்பு ஏற்படும்.



'சுபஸ்ய சீக்ரம்—நற்செயல்களை விரைவில் செய்துவிடு' என்பது ஆன்றோர் வாக்கு.

'நற்செயல்களை இந்தக் கணமே (இன்னே) செய்ய வேண்டும்' என்ற கருத்தைத் தமிழிலும் ஒரு பாடல் சொல்கிறது. அந்தப் பாடல் வருமாறு:—

ஒன்றே செய்யவும் வேண்டும்—ஒன்றும்
நன்றே செய்யவும் வேண்டும்—நன்றும்
இன்றே செய்யவும் வேண்டும்—இன்றும்
இன்னே செய்யவும் வேண்டும்.
நாளை நாளை என்பீராகில்
நம்முடை நாளாவதும் அறியீர்—அது
நமனுடை நாளாவதும் அறியீர்.

# தத்துவத் துளிகள்

சில வேளைகளில் ஒருவரின் வாழ்க்கை பூமியின் விதியைத் தாங்குகிறது.
—**அரவிந்தர்**

சம்போ! தானம் அளிப்பதற்கு இது தான் சரியான காலம்; தானம் பெறுவதற்குத் தகுதியானவன் நான்தான்! தாங்கள்தாம் தானமளிப்பவர்! தங்களைத் தவிர வேறு எவரையும் நான் வேண்டேன். தங்களிடம் ஸ்திரமான பக்தியை எனக்குத் தானமாக அருள்வீராக! இதனால் நான் நிறைவு பெறுவேன். —**சங்கரர்**

ஊசியில் ஓட்டை இல்லாவிட்டால் நூல் நுழையாது. அதைப் போல் மனதில் ஆசை இல்லாவிட்டால் எந்த மாயையும் நுழைய முடியாது. —**ஒரு துறவி**

உன்னுடைய செல்வம் உன்னுடன் வராது. அவ்விதம் இருக்கும்போது அதில் ஆழ்ந்து போவானேன்? —**குரு நானக்**

பிறரை நீ ஏளனம் செய்யாதே; யாவரையும் நேசி. உனது சமுதாயத்தை நீ புறக்கணிக்காதே. அதனுடன் அன்பாகவும் ஒற்றுமையாகவும் வாழ்.
—**ராமதீர்த்தர்**

சேராத இடத்தில் சேர்ந்தால், வாராத துன்பமும் வரும். —**ஒரு பழமொழி**

மற்றவர்களிடம் ஏற்பட்டால் எதைக் குற்றம் என்று பார்க்கிறோமோ, அதுவே நமக்கு ஏற்பட்டால் சோதனை என்று அழைக்கிறோம். —**எமர்ஸன்**

வாயைக் காப்பவன் தன் வாழ்வைக் காத்துக்கொள்கிறான். —**ஸ்வீடன்**

சிங்கம் தன்னை அடைத்திருக்கும் கூண்டிலிருந்து தன் சுய பலத்தினால் வெளி வருவது போன்று, சம்சாரக் கூண்டிலிருந்து பௌருஷ பலத்தினால் ஒருவன் தப்பிக்க வேண்டும். —**வாஸிஷ்டம்**

# ஆத்ம தத்துவம்

## உலகம் உண்மையல்ல

'விச்வம்'

அரச குலத்தில் பிறந்த குழந்தை கள்வரால் எடுத்துச் செல்லப்பட்டு வளர்க்கப்படுகிறுன். அவன் வளர்ந்து கள்வர்களின் தலைவனுகிறுன். பின்பு ஒரு நாள், தான் ஓர் இளவரசன் என்பதைப் பிறர் மூலம் அறிகிறுன். அறிந்த அந்த நிமிஷமே தான் கள்வன் அல்ல, இளவரசனே என்பதை அறிந்து அந்த நிலைக்கு ஏற்றவாறு நடக்கிறுன், பெருமை அடைகிறுன்.



அது போலவே இந்த உலகிலுள்ள அனைத்து ஜீவன்களும் உண்மையில் மூன்று காலத்திலும் நிலைத்து நிற்கக் கூடிய, முதலும் முடிவும் இல்லாத 'சத்து சித்து ஆனந்த' மயமான பிரம்மமே ஆகும். ஆனல் இந்த ஒளி, வெளியில் தெரியாதவாறு மறைக்கும் திரை எது? அதுவே அறியாமை என்னும் திரையாகும்.

கண்ணுடியில் தன் உருவம் காண விரும்புகிறவன் அதன்மீது நீண்ட நாளாகப் படிந்துள்ள அழுக்கைத் துடைத்துவிட்டுப் பின்பு காண்கிறுன். ஜீவனும் தன் மனதில் படிந்துள்ள அறியாமை என்னும் அழுக்கை, திரையை நீக்க வேண்டும்.

அறியாமையை நீக்க ஜீவன் தான் அனுபவிக்கும் மூன்று நிலைகளின் தன்மையை உணர வேண்டும். இதைத் தவிர, மூன்று வித உண்மைகளை (ஸத்தைகளை) அறிய வேண்டும்.

ஸத்தைகள் மூன்று ஆகும். அவை பிராதிபாசிக ஸத்தை, வியாவஹாரிக ஸத்தை, பாரமார்த்திக ஸத்தை.

பிராதிபாசிக ஸத்தை என்பது, ஒருவன் கல்வி அறிவோ தத்துவஞானமோ இல்லாமலேயே எது உண்மை எது பொய் என்பதை உணர்வது. இருட்டில் கயிற்றைப் பாம்பென்று நினைத்துப் பயந்து, பின்பு விளக்கின் துணைகொண்டு தான் கண்டது பாம்பல்ல, கயிறுதான் என்று உணர்கிறுன். இதற்குக் கல்வி அறிவு வேண்டும் என்பது இல்லை. மேலும், அவன் தான் கனவில் கண்ட நிகழ்ச்சிகளைக் கனவிற்குப் பின்னும் காண முடியாது என்பதையும் அறிவான்.

வியாவஹாரிக ஸத்தை என்பது முதலில் உண்மை போலத் தோன்றும். பின்பு விசாரணை முதிர்ச்சியில், அதாவது தத்துவஞானத்தால் பொய் என்று உணர்வது. அறியாமையில் முழுகியிருக்கும் ஜீவன் அறியாமை அதனிடத்தில் இருக்கும் வரையில் உலகையும், உலகிலுள்ள பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் கண்டு உண்மை இவைதாம் என்று மகிழ்கிறது. பின்பு சாத்திரங்களைப் படிப்பதனுலும், நல்லவர்களுடன் பழகுவதனுலும் அறிவில் முதிர்ச்சியடைந்து, பல நாள் ஆழ்ந்து சிந்தனை செய்து, முடிவில் தான் இதுநாள் வரை நிஜம் என்று நினைத்த உலகம் பொய்யானது என்று உணருகிறது. இவ்வாறு உணர்வதற்கு ஜீவனுக்குத் தத்துவஞானம் அவசியமாகிறது.

மூன்ருவது பாரமார்த்திக ஸத்தை. இது எவ்வித மாறுபாடுகளுக்கும் இடம் கொடுக்காதது. மூன்று காலங்களிலும் ஒரே

நிலையாய் நிலைத்து இருப்பதாகும். இந்த ஸத்தையே பிரம்மம் ஆகும்.

**ஜீவனின் மூன்று நிலைகள் (அவஸ்தைகள்):** மனிதன் மூன்று நிலைகளை அனுபவிக்கிறான். அவை ஜாக்ரத் எனப் படும் விழிப்பு நிலை, ஸ்வப்னம் எனப்படும் கனவு அல்லது உறக்க நிலை, மூன்றாவது சுஷுப்தி எனப்படும் ஆழ்ந்த உறக்க நிலை.

முதல் நிலையான விழிப்பு நிலை வியாவஹாரிக ஸத்தை உடையது. இந்த நிலையில் மனிதன் தன் ஐந்து வகை இந்திரியங்களினால் ஐந்து வகையான தூலப்பொருள்களை அனுபவிக்கிறான். கண்ணால் இயற்கையழகைப் பார்க்கிறான். காதால் வார்த்தைகளைக் கேட்கிறான். மூக்கினால் மணத்தை அனுபவிக்கிறான். நாக்கால் இனிப்பைச் சுவைக்கிறான். சரீரத்தால் சுகத்தை அனுபவிக்கிறான். இந்த ஐந்து வகைக் காரியங்களையும் தன் மனம் ஆட்டும் வழியில் செய்கிறான்.

விழிப்பு நிலையில் அவன் அனுபவிக்கும் பொருள்களால் இன்பமும் துன்பமும் மாறி மாறி அடைகிறான். விழிப்பு நிலையிலிருந்து கனவிற்கோ ஆழ்ந்த உறக்கத்திற்கோ சென்றுவிட்டால், அனுபவித்த அனுபவங்களும் கண்ட உலகமும் முழுமையாக அழிந்துவிடுவதில்லை. மீண்டும் விழிப்பு நிலைக்கு வரும்பொழுது, முன்பு விட்ட இடத்திலிருந்து மீண்டும் தொடர்வதாகத் தெரிகிறது.

கண்ணால் காண்கிற யானை எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையாக இந்த உலகையும் நினைக்கிறான். கனவைப் போல் பொய்யென்று நினைப்பதில்லை. விழிப்பு நிலை உலகமானது கனவு உலகினின்றும் மாறித்தான் உள்ளது. அந்த மாற்றத்தை மனிதன் உணர முடியாமல் தடுப்பது அவனிடத்தே உள்ள அறியாமை.

காணப்படுகிற ஒவ்வொரு பொருளும் பிறப்பு, வளர்ச்சி, மாறுபாடு, தேய்வு, நோய், அழிவு என்னும் ஆறுவித மாறுதல்களுக்கு உட்பட்டே தீரும். உலகப் பொருள்கள் மட்டும் இன்றி, அவற்றை அனுபவிக்கும் ஜீவனின் எண்ணங்களும் மாறுகின்றன. இந்த மாற்றங்கள் க்ஷணத்திற்கு க்ஷணம் நிகழ்வதனால் எளிதில் ஜீவனுக்குப் புரிவதில்லை.

முன்பு இன்பமாக இருந்த பொருள் பின்பு அதே மனிதனுக்குத் துன்பமும் தருகிறது. ஒரு பொருளே இன்பமாகவும் துன்பமாகவும் ஜீவனுக்குத் தோன்றக் காரணம், அதன் அறியாமையே. நல்ல வழிகளைக் கடைப்பிடித்து அதனால் இந்த அறியாமையை அழித்து, உண்மையான அறிவைப் பெற்றுவிட்டால் இந்த மாற்றங்கள் தெளிவாகத் தெரியும். நிலையில்லாமல் மாறிக்கொண்டிருக்கும் உலகம் சத்தியமல்ல என்றும் ஜீவன் உணரும்.

இரண்டாவது நிலையான கனவு நிலை பிராதிபாசிக ஸத்தை உடையது. கனவு நிலையில் ஜீவனின் ஐந்து உறுப்புக்களும் ஓய்வுபெற்றிருக்கின்றன. ஆயினும் அவன் மனமே அனுபவத்திற்கு வேண்டிய பொருளாகவும், அனுபவிப்பவனாகவும் இருக்கிறது.

மனமே எல்லாக் கனவுக் காட்சிகளையும் உற்பத்தி செய்கிறது. பணக்காரன் கனவில் தான் பிச்சை எடுப்பதாகக் காண்கிறான். அவன் இதைப் பொய்யென்று அறிவதில்லை. அவன் கனவு கலையும் பொழுதே தான் கண்டதும், அனுபவித்ததும் பொய் என்று உணருகிறான்.

மூன்றாவது நிலையான ஆழ்ந்த உறக்க நிலையில் மனமும் ஐந்து உறுப்புக்களும் பூரணமான ஓய்வு பெறுகின்றன. இந்த நிலை விழிப்பு, உறக்க நிலைகளிலிருந்து மாறுபட்டது. இதில் விழிப்பு உறக்க நிலைகளில் காண்கிற உலகமும் இன்ப துன்பங்களும் இல்லை. காரணம், சிறுவிதையில் பெரிய மரமே கருவாய் அடங்கி உள்ளது போல், மனமும் ஐந்து உறுப்புக்களின் சலனம் இன்றி அடங்கிக் கிடக்கிறது. உலகமும் அதனால் உண்டாகும் இன்ப துன்பங்களும் இந்த நிலையில் இல்லை. இதற்குப் பதிலாக ஆழ்ந்த உறக்கத்தில் ஜீவன் எல்லையற்ற சாந்தி அடைகிறது. இந்தச் சுகம் வேறு ஒன்றுடன் ஒப்பிட்டுக் கூற முடியாததாக உள்ளது. இதுவே பிறப்பு இறப்பு நிலை கடந்த ஞானிகளாம் ஜீவன்முக்தர்கள் அனுபவிக்கும் பிரம்ம சுகத்தின் முன் மாதிரி. இந்தச் சுகத்தை ஒவ்வொரு ஜீவனும் தினமும் அனுபவித்தாலும்,

'அனுபவிக்கிறோம்' என்ற அறிவுடன் அனுபவிப்பதில்லை. ஆழ்ந்த உறக்க நிலை கலையும்பொழுது அனுபவித்த ஞாபகம் மட்டுமே மிஞ்சுகிறது. இவ்வாறு ஆழ்ந்த உறக்க சுகத்தை அறிவுடன் அனுபவிக்க விடாமல் நம்மைத் தடுப்பது அறியாமையே.

விழிப்பு நிலையில் நாம் காணும் உலகமும், அதில் அனுபவிக்கும் இன்ப துன்பங்களும் உண்மை என்று நம்மை நம்பச் செய்வதும், உண்மையான பிரம்மசுகத்தின் முன்மாதிரியாக விளங்கும் ஆழ்ந்த உறக்கச் சுகம் நமக்குக் கிடைத்தும், அதை அறிவுடன் அனுபவிக்க விடாமல் நம்மைத் தடுப்பதும் இந்த அறியாமையே.

மண்ணில் புதைந்திருக்கும் வைரத்தை வெட்டி எடுப்பதனால் மட்டும் அது வைரக் கல் என்று நாம் மதிப்பதில்லை. அதைச் சுத்தம் செய்து பட்டை தீட்டிய பின்பே மின்னுகிறது; மதிப்பும் கூடுகிறது. மனதிலுள்ள அழுக்கு நீங்க, நாம் சில ஆன்மிகப் பயிற்சிகளைச் செய்ய வேண்டும். இந்தப் பயிற்சிகளை மனிதன் எந்த நிலையில் செய்வது சுலபமானது? விழிப்புநிலைதான் இதற்கு ஏற்றதாகும். ஏனெனில், கனவு, உறக்க நிலையில் செய்பவன் என்பவன் இல்லை; விழிப்பு நிலையில் ஜீவனே செய்பவனாக விளங்குகிறது.

ஆன்மிகப் பயிற்சி என்பது சாஸ்திரங்களைப் படிப்பது, குருவின் துணை கொள்வது, நல்ல சங்கங்களை நாடுவது என்பன ஆகும். ஆன்மிக நூல்களைப் படிப்பது, படிப்பதோடு அல்லாமல் அதன்வழி நடப்பதே ஆகும்.

விழிப்பு நிலையில் மனிதன் அனுபவிக்கும் இன்ப துன்பங்கள் நிலையில்லாதவை என்றே நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன. இன்பம் துன்பம் என்று இரண்டு கிடையாது. உண்மையில் இன்பம் போலத் தோன்றுவது துக்கமே ஆகும். உலகில் ஆறு வித மாறுதல்களுக்கு உட்படும் பொருள்கள் அனைத்தும் இன்பம் தருவது போல நமக்குத் தோன்றினாலும் கடைசியில் அவை தருவது துன்பமே.

எல்லாப் பொருளும் நிலையில்லாதது, மாறிக்கொண்டே இருக்கும் இயல்பானது என்பதை நாம் உணர வேண்டும்.

குழந்தை பிறந்து, வளர்ந்து, சிறுவனாகி வாலிபனாகி மகிழும் நாம் வயது முதிர்ந்து கிழவனாகி நோயுற்று மடிவதைக் கண்டு வருந்துகிறோம். மகிழ்ச்சி தந்த குழந்தையே பின்பு துன்பத்தையும் தருகிறது.

உலகில் பிறக்கும் எந்தப் பொருளும் அழிவை நோக்கியே பயணம் செய்கிறது. இன்ப துன்ப இரட்டைகளில் சிக்கிக் கொள்வதே பிறப்புக்கும் இறப்புக்கும் காரணம்.

பெரியோர் இன்பம் துன்பம் ஆகிய இரண்டினாலும் சிறிதும் பாதிக்கப்படுவதில்லை. காரணம், மலர் மலர்வது பிஞ்சாகிக் காயாகிப் பின்பு கனியாகி நிலத்தில் விழுவதற்கு என்று அறிகின்றனர். பெரியோர், இன்பம் துன்பம் ஆகிய இரண்டிலும் சிக்காமல் இரண்டிலிருந்தும் தனித்து ஒரு சாட்சியாளனாக நிற்கின்றனர். பெரியோர், 'நான் மூன்று காலத்திலும் மாற்றம் இல்லாத சாட்சியே; மாறுகின்ற அகங்காரமே பொய்' என்று எண்ணுவர்.



அகங்காரம் வியாவஹாரிக ஸத்தை உடையது. அறியாமை இருக்கிற வரையில் அகங்காரமும் இருக்கும். அறியாமையாகிய இருட்டு நீங்கும்பொழுது அகங்காரமும் நீங்குகிறது. அந்த இருட்டை நீக்கும் ஒளியே அறிவாகும். அதுவே ஆன்ம ஞானமாகும்.

எனவே, பொய்யான உலகை உண்மை என்று எண்ணாமல் நிலையான பிரம்மமே உண்மையானது என்று அதில் நிலைபெற விருப்புக் கொள்ள வேண்டும். பிறப்பு, இறப்பு நிலையை நீக்கி, நிலையான ஆனந்த நிலையைக் காட்டும் சத்குருவின் பாதத்தில் சரணடைய வேண்டும்.

ஒரு நீதிக் கதை :

# பகவான் வேடனைப் போன்றவன்

**விவேகானந்ததாசன்**



**வை**ணவச் சமயத்திற்குப் பெருமை தேடித் தந்த மகான்கள் பலர். அவர்களில் தமிழகத்தைச் சேர்ந்த பராசரபட்டர் என்பவரும் ஒருவர். அவர் இரத்தினச் சுருக்கமாகத் தெரிவித்த ஒரு கருத்து, ஆழ்ந்த ஓர் உண்மையைப் புலப்படுத்துவதாக அமைந்திருக்கிறது.

பராசரபட்டருக்கு நஞ்சீயர் என்ற நெருங்கிய சீடர் இருந்தார். ஒரு நாள் ஏதோ வேலையாகத் திணைவாணையாடி என்ற குக்கிராமத்திற்குப் பராசரபட்டர் செல்ல வேண்டியிருந்தது. எனவே அவர் நஞ்சீயர் உடன்வர அந்தக் கிராமத்திற்குச் சென்றார். அங்கே கவனிக்க வேண்டிய வேலைகள் முடிந்ததும் இருவரும் சேர்ந்து தங்கள் ஊருக்குத் திரும்ப ஆரம்பித்தனர். வரும் வழியில் பாதிரி என்ற கிராமத்தை அவர்கள் நெருங்கியபோது, மாலை சாய்ந்து இருள் சூழத் துவங்கியது.

ஆதலால் பராசரபட்டர் அன்றைய இரவைப் பாதிரி கிராமத்தில் கழித்துவிட்டு மறுநாள் காலை ஊருக்குப் புறப்பட முடிவு செய்தார்.

பாதிரி கிராமத்தில் ஒரு வேடன் இருந்தான். அவன் பராசரபட்டரையும் நஞ்சீயரையும் வரவேற்றுத் தன் வீட்டில் தங்கும்படி கேட்டுக்கொண்டான். அதற்குப் பராசரபட்டரும் சம்மதித்தார்.

வேடன் ஒரு கயிற்றுக் கட்டிலைக் கொண்டுவந்து போட்டு அதில் பராசரபட்டர் அன்றிரவு உறங்குவதற்கு ஏற்பாடு செய்து தந்தான்.

அந்தக் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்தபோது பராசரபட்டரின் உள்ளத்தில் ஒரு சிந்தனைக் கீற்று பளிச்சிட்டது. அதை அவர் தமது அன்புச் சீடரான நஞ்சீயரிடம் பின்வருமாறு குறிப்பிட்டார்:—

''இதோ இந்த வேடனைப் பாரும். இவனுக்கு நம்மைப்பற்றி ஒன்றுமே தெரியாது. நாம் இவனுக்கு எந்த உதவியும் முன்பு செய்ததில்லை. என்றாலும் முன்பின் அறிமுகம் இல்லாத நிலையிலும் நம்மை இவன் வரவேற்றான். நாம் யார் என்ன என்பது தெரியாத நிலையிலும் நம்மை இவன் உபசரித்தான். நம்மிடமிருந்து ஏதேனும் ஓர் உதவியை முன்பு இவன் பெற்று, அதற்காக இவன் இப்போது பிரதியுபகாரம் செய்கிறான் என்றால் அதுவும் இல்லை. ஏனென்றால் நம்மை இவன் இப்போதுதான் முதல் முறையாகவே பார்க்கிறான். அப்படி எல்லாம் இருக்கும்போது இந்த வேடன் நமக்கு இவ்வளவு உதவிகளையும் ஏன் செய்தான்? நம்மீது இவனுக்கு அன்பு தோன்றியது. அந்த ஒரு காரணத்தாலேயே இவன் நமக்கு உதவி செய்தான். பகவானும் இந்த வேடனைப் போலவேதான் தன்னைச் சார்ந்து வாழ்பவர்களுக்குக் காரணமின்றித் திருவருள் புரிந்து காத்து வருகிறான்.''

இறைவன் திருவருள் பாரபட்சமின்றி வீசும் அருள்காற்றுப் போன்றது. அதை முறையாகப் பயன்படுத்தினால் மேன்மை அடையலாம்.

---

வறுமையே, தீமையில் தீமையும் குற்றத்தில் கொடியதுமாகும்.

—பெர்னாட் ஷா

நாணயம் உள்ளவனிடம் எப்பொழுதும் குழந்தைப் பண்பு காணப்படும்.

—மார்ஷியஸ்

# சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 13,0001 முதல் 13,0423 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை டிசம்பர் மாதத்துடன் முடிவடைகிறது. மேற்கொண்டு பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 12ஐ டிசம்பர் 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

* சந்தா எண் 20001 முதல் 20160 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜனவரி மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 30001 முதல் 30644 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை பிப்ரவரி மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 40001 முதல் 40281 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை மார்ச் மாதத்துடன் முடிவடைகிறது.

மேலே குறிப்பிட்டுள்ள எண்களுக்கிடையில் உள்ள சிலர், ஏற்கனவே சந்தாவை அனுப்பிப் புதுப்பித்துக் கொண்டிருக்கிறார்கள். அவ்விதம் புதுப்பித்துக் கொள்ளாத அன்பர்கள் கூடிய விரைவில் சந்தாவைச் செலுத்திப் புதுப்பித்துக் கொள்ள வேண்டுகிறோம்.

சந்தாவைக் கூடிய விரைவில் முன்னதாகவே செலுத்துவதானால் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

ஆண்டுதோறும் ரூ. 12 சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூ. 150 செலுத்திவிட்டால், தொடர்ந்து மாதந்தோறும் ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும்.

வாசகர்கள் மூன்று புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துப் புத்தாண்டை ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயத்துடன் துவக்கும்படி செய்யலாம்.

ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவுசெய்துகொள்ள விரும்பும் ஆண்டுச் சந்தாதாரர்கள், தாங்கள் செலுத்தியுள்ள ரூ. 12 போக மீதி ரூ. 138-யைச் செலுத்தி ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ளலாம். தொகையை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ ஒரு வருடத்தில் செலுத்தலாம். ஆயுள் சந்தாதாரராகச் சேருவது பத்திரிகையின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவி செய்வதாகும்.

நிர்வாகி,
**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

'எழுமின், விழிமின், குறிசாரும் வரை நில்லாது செல்மின்!'
—சுவாமி விவேகானந்தர்

தொகுதி 62

துர்மதிஸூ தை முதல் துந்துபி மார்கழி முடிய

1982

RAMAKRISHNA MATH

ஆசிரியர்: சுவாமி தன்மயானந்தர்
இணை ஆசிரியர்: சுவாமி கமலாத்மானந்தர்

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்**

ஸ்ரீராமகிருஷ்ண மடம்
16, ராமகிருஷ்ண மடம் ரோடு
மயிலாப்பூர்
சென்னை-600 004.

# பொருளடக்கம்

(அகர வரிசை)


STANDARD 20
DIESEL